# பாடுவோம், புதிய கீதம்!

மதிவண்ணன்

- வரை படமா இந்தியா?
  இல்லை,
  தியாகங்களின் வார்ப்படம்!
- ஆயிர மாயிரம்
  தேச பக்தர்களின்
  ஒருமித்த
  உயிர்க் காற்றில் அல்லவா
  ஒற்றைக் கொடி
  உயரே பறக்கிறது!
- இச் சுதந்திரத்தைக்
  கண்ணீரால் காத் தோம்
  என்றான்




அதனால் தானா
இன்னமும் கண்ணீர்?

- அருமைத் தோழனே!
  அப்படி யல்ல!
  நம் கண்ணீரை
  அரசின் இலவச விரல்கள்.
  துடைத்தால் போதும்என
  நாம் தூங்கிக் கொண்டிருக்கிறோம்.
  ஆட்சிச் சாவியை
  அவ்வப் போது பெறுகிறவர்களும்
  கருவூலத்தைத் திறந்து
  அறிவிப்பது
  'ஐ. எஸ். ஐ' முத்திரையிட்ட லஞ்சம்
  ஆம்!
  இலவசத் திட்டம்!
  சலுகைச் சட்டம்!
- எழுந்ததா சுதந்திர மாளிகை?
  இல்லையே!
  அங்கங்கே
  அடிக்கல் நாட்டுவதற்கே
  அத்தனைக் கற்களும்
  செலவாகி விட்டன.
- இங்கே
  ஜனத்தொகையை விட
  சிலைத் தொகை அதிகம்.
  நாமே
  சிலையாகச் சமைந்தோம்
  உழைப்பைப் பற்றி
  நாம் கவலைப் படவில்லை.
- பாதை இருந்தும்
  பயணிக்காமல்
  போதை மருந்துடனா நாம்
  பொழுது போக்குவது?
- 'பாட்டிலில்', இருந்து
  'பாக்கெட்'டுக்கு
  வருவதா மாற்றம்?
- நம்பிக்கையோடு
  நம்மிரு கை உழைக்கட்டும்.
  உலகச் சாதனைச் செல்லாம்
  வேர் வைப்பதே
  வேர்வை தானே!
- இந்திய ஜாதி என்று
  இதயத்தில் பதித்து,
  ஊழலை எதிர்த்து,
  உழைப்பை மதித்து
  பாடுவோம் புதிய கீதம்.
  இதோ!
  பல்லவி பிறந்து விட்டது!

# கட்சி நிற்குமா?



நிருபர்: சமீபத்திய பிரச்னைகள், விவகாரங்கள், ஜனதா தளக் கட்சியை அதள பாதாளத்துக்குக் கொண்டு போய் விட்டன. கட்சியை மீண்டும் ஒரு நிலைக்குக் கொண்டு வர உங்களிடம் இருக்கும் திட்டங்கள் என்ன?

எஸ். ஆர். பொம்மை: ஜனதா தளக் கட்சியின் இமேஜ் கீழே இறங்கிப் போய் விட்டது என்று நீங்கள் சொல்வது தவறு. உண்மையைச் சொல்லப் போனால் நெருக்கடிக்குப் பிறகு, வலிமையாகவும், நிலையாகவும் கட்சி நிமிர்ந்து நிற்கிறது என்பதுதான் சரி.

நிருபர்: சௌதாலா பிரச்னை கட்சியினுடைய இமேஜைக் குறைக்கவில்லை என்பது உங்களது கருத்தா?

பதில்: இல்லை. இந்த நெருக்கடியானது புதிய அரசியல் அணுகுமுறையைத் தோற்றுவித்திருக்கிறது.

நிருபர்: எப்படி?

பதில்: நேரு காலத்து அரசியல் அணுகுமுறையை நாங்கள் மீண்டும் கொண்டு வந்திருக்கிறோம். மாநிலங்களிலிருந்து வந்த தேசியத் தலைவர்களை நேரு மதித்தார். உதாரணமாகச் சொல்லப் போனால், நிஜலிங்கப்பா, காமராஜ், பி. ஸி. ராய், சஞ்சிவ ரெட்டி, சுக்லா போன்றோரது கருத்துக்களை வரவேற்றார். அது போலத்தான் ஜனதா தளக் கட்சியின் 'நெருக்கடியின் போது பல மாநில முதலமைச்சர்கள், ஜனதா தளத் தலைவர்கள் மட்டுமல்லாது, தேசிய முன்னணியைச் சார்ந்த மாநிலத் தலைவர்கள் போன்றோர் தில்லிக்கு வந்திருந்து பிரச்னைகளை விவாதித்து, நெருக்கடியைத் தீர்த்து வைத்தார்கள்.

இந்திரா காந்தியும், ராஜீவ் காந்தியும் மாநிலத் தலைவர்கள் உருவாவதையே தடுத்தார்கள். கூட்டாட்சி முறைக்கு வேட்டு வைத்தார்கள். அதன் விளைவுதான் இன்று பஞ்சாபிலும், காஷ்மீரிலும் எழுந்துள்ள பிரச்னைகள். ஆனால் நாங்கள் நேரு காலத்தில் மேற்கொண்ட அரசியல் அணுகுமுறையைப் புதுப்பித்துள்ளோம். கூட்டாட்சி முறையில் நம்பிக்கை கொண்டு, மாநிலத் தலைவர்களுடன் இணைந்து கைகோத்து, முடிவுகளை மேற்கொள்கிறோம். அதனால் தான் மக்களுக்கு எங்கள் பேரில் நம்பிக்கை. உ. பி. தேர்தலில் பெரும்பான்மை இடங்களுடன் வென்றோம்...

மேலும் சௌதாலா பிரச்னைதான்



— எஸ். ஆர். பொம்மை சிறப்புப் பேட்டி!

# ஆட்சி நிலைக்குமா?

என்ன? அவர் மீது வீசப்பட்ட குற்றச் சாட்டுக்களுக்கு முகாந்திரம் உண்டா? மே மாதம் நடந்த நிகழ்ச்சிகளுக்குப் பிறகுதானே தர்பா கலான் தொகுதியில் பாதிக்கு மேற் பட்ட வாக்குகளுடன் அவர் வெற்றி பெற் றார். இத்தனைக்கும் அவர் பிரசாரத்துக்குப் போகவே இல்லை. இந்த மகத்தான வெற்றிக்குக் காரணம் ஜனநாயக முறை களில் ஜனதா தளம் வைத்திருக்கும் நம்பிக் கையும், மக்கள் எண்ணங்களுக்கு மதிப்பு கொடுக்கும் முறையும்தான். இவை ஜனதா தளத்தின் மீது மக்களுக்கு ஒரு பிடிப்பை உண்டாக்கி இருக்கின்றன. அவர் வெற்றிக் குக் காரணம் இதுதான்.

நிருபர்: பல தேர்தல்களில் வெற்றி பெற்றதாலேயே, ஜனதா தளத்தில் பிரச்னை கள் இல்லையென்றோ சௌதாலா குற்ற மற்றவர் என்றோ சொல்ல முடியாதே!

பதில்: நோ. நான் அப்படிச் சொல்ல வில்லை. இன்னமும் மக்கள் ஜனதா தளத்தை விரும்புகிறார்கள். அதற்கு வோட்டு போட்டிருக்கிறார்கள். சௌதாலா வுக்கு அவ்வளவு எதிர்ப்பு இருந்தும் ஏன் வோட்டு போட்டார்கள்? ஜனதா தளக் கட்சிக்குப் போடப்பட்ட வோட்டு அது.

நிருபர்: சமீபத்தில் வாஜ்பாய் சென்னை யில் பேசிய போது 'தங்களை மீண்டும் பலப் படுத்திக் கொள்ள மற்றொரு நெருக்கடியை ஜனதா தளக் கட்சியினர் ஏற்படுத்திக் கொள்ள மாட்டார்கள் என்று நம்புகிறேன்' என்றார். இது பற்றி நீங்கள் என்ன சொல் கிறீர்கள்?

பதில்: ஜோக்குகளுக்கு நான் பதில் சொல்ல வேண்டியதில்லை. ஆனால் ஒன்று சொல்ல வேண்டும். ஜனதா தளம் ஒன்றரை வருடக் குழந்தை. பல கட்சிகள் ஒன்று சேர்ந்ததில் உருவாகியுள்ளது. அதனால் ஆரம்பக் கட்டத்தில் பிரச்னைகள் இருக்கத் தான் செய்யும். ஆனால் கட்சியையும் ஆட்சியையும் காப்பாற்ற நாங்கள் எந்த விதமான தியாகத்துக்கும் தயாராயுள்ளோம் என்பதை நீங்கள் தற்போது புரிந்து கொண் டிருப்பீர்கள்.

நிருபர்: அதாவது, பதவியைக் காப்பாற் றிக் கொள்வதற்காகவும், இ. காங்கிரஸ் பதவிக்கு வந்து விடுமே என்ற பயத்தினா லும், எவ்வளவு மோதல்கள் வந்தாலும் கடைசியில் ஒன்றாகி விடுவீர்கள்...?

பதில்: இது குதர்க்கமான கேள்வி. நாடு சர்வாதிகாரப் பாதையில் சென்று கொண் டிருந்ததைத் தடுத்து நிறுத்தி, நாங்கள் பதவிக்கு வந்த கடந்த ஏழெட்டு மாதங்களில் மிகக் குறுகிய கால கட்டத்தில் — பல ஜன நாயக அமைப்புக்களைச் செயல்பட வைத் துள்ளோம். அரசியல் முனையில் நாங்கள் கொடுத்த பல வாக்குறுதிகள் நிறைவேற்றப் பட்டுள்ளன. தேர்தல் சீர்திருத்தம், தாழ்த்தப் பட்டவர்களுக்குச் சலுகை, புதிய அணுகு முறையில் பஞ்சாயத்து ராஜ் மசோதா, மாநில கவுன்ஸில்கள், சுதந்திரமான பத்திரிகை அமைப்பு, சாமான்யனுக்கும் நீதி கிடைக்க நீதித் துறையின் மறுமலர்ச்சி... இப்படி பலப்பல. இவற்றையெல்லாம் மறந்து விடுகிறார்கள்! பரபரப்புக்காகப் பிரச்னைகளைப் பற்றியே பேசுகிறார்கள். பொருளாதார முனையில் இன்னமும் சாதிக்க வேண்டியது நிறைய உள்ளது. பஞ்சாப், காஷ்மீர், ராமஜன்ம பூமி பிரச் னைகள் உள்ளன. மறுக்கவில்லை. ஆனால் இப் பிரச்னைகளெல்லாம் காங்கிரஸினால் தோற்றுவிக்கப்பட்டவை. பத்து வருட கால மாகத் தீர்க்கப்படாத பிரச்னைகளை இவ் வளவு குறுகிய காலத்தில் நாங்கள் தீர்த்து வைத்து விட வேண்டும் என்று நீங்கள் எதிர் பார்ப்பது சரியல்ல! முன்பு ஆண்ட அரசை யும் எங்கள் அரசையும் ஒப்பிட்டுப் பாருங் கள்; எங்கள் சாதனை புரியும். எங்களை நம்பி வோட்டுப் போட்ட மக்களுக்கே நாங் கள் பயப்படுகிறோம் வேறு யாருக்கும் அல்ல.

நிருபர்: ஜனதா தளத்தில் ஏதாவது நெருக்கடி தோன்றும் போது ஜனமோர் சாவில், இவ்வளவு எம்.பி.க்கள், தேவிலா லுக்கு லோக்தள எம்.பி.க்கள் ஆதரவு என்று அவரவர் தலைகளை எண்ண ஆரம்பித்து விடுகிறார்களே?

பதில்: யார் எண்ணுகிறார்கள்? பத்திரி

**"தவிர்க்க முடியாத சந்தர்ப்பத்தில் தேர்தல் வந்தாலும் எங்கள் ஜனதா தளம் தனிப்பட்ட பூரண மெஜாரிட்டியுடன் மீண்டும் பதவிக்கு வரும்."**



### அன்பு

அன்பு என்பது வெறுப்புக்குஎதிர்ப் பதம் அல்ல. ஒருவன் வெறுக்காமலிருப்பதால் அன்பு செலுத்துபவன் ஆகிவிட மாட்டான். அன்பைப் பலவந்தமாகச் செலுத்தவும் முடியாது, பெறவும் முடியாது. தூய அன்பு என்பது கேளாமலே தரப்படுவது. அது கனைபோல் தானாகவே உற்பத்தியாகி சுயநலமற்றுப் பாய்வது. கடவுள் அன்பு மயமானவர். அன்புதான் கடவுள்.

— ஸ்ரீ சத்யசாயிபாபா.

கைக்காரர்கள்தான் எண்ணுகிறார்கள்! நாங்கள் அல்ல... என்னைப் பொறுத்த வரை தலைகளை எண்ணுவது என் வேலையல்ல. தலைக்குள் என்ன இருக்கிறது என்று பார்ப்பதே என் வேலை.

நிருபர்: ராமகிருஷ்ண ஹெக்டே தலைவராக வர விரும்பினார். ஆனால் தேவிலால் அவரை விரும்பாததால் உங்களை முன்னிலைப்படுத்தினார்...

பதில்: இது தவறான உள்நோக்கத்துடன் கேட்கப்படும் கேள்வி. ஜனநாயக முறைப்படித்தான் எல்லாம் நடந்தது. ராமகிருஷ்ண ஹெக்டே தலைவர் பதவிக்கு மனு தாக்கல் செய்யப் போகிறார் என்று கேள்விப்பட்டவுடன் நான் என் எண்ணத்தை மாற்றிக் கொண்டேன். ஹெக்டேஜியை, மனு தாக்கல் செய்யும்படி கடைசி நேரம் வரை நான் கேட்டுக் கொண்டேன். அவர் மறுக்கவேதான் நான் மனு தாக்கல் செய்தேன். உங்கள் கற்பனையை இஷ்டத்துக்குப் பறக்க விடாதீர்கள்!

நிருபர்: சமீபத்தில் சௌதாலா பிரச்னையைத் தீர்ப்பதற்கு வி. பி. சிங், காலக் கெடு விதித்ததற்காக நீங்கள் அவரைக் கண்டித்தீர்கள் என்று செய்தி வந்தது...

பதில்: முதலில் ஒரு திருத்தம். பிரதமர், நிலைமையின் அவசரத்தை விளக்கினாரே தவிர, காலக்கெடு எதுவும் விதிக்கவில்லை. அதனால் அவரை நான் கண்டித்தேன் என்ற பேச்சுக்கே இடமில்லை. ஒரு செய்தி நிறுவனம் வெளியிட்ட தவறான தகவலை எல்லோரும் நம்பி விட்டார்கள். அந்தச் செய்தி நிறுவனத்தின் மீது தகுந்த நடவடிக்கை எடுக்கப்படும்.

நிருபர்: ஜனதா தளக் கட்சிக்கும் ஆட்சிக்கும் சோதனைகளையும் நெருக்கடிகளையும் தொடர்ந்து ஏற்படுத்தி வரும் தேவிலாலைக் கட்சியிலிருந்து வெளியேற்றும் தைரியம் உங்களுக்கு உண்டா?

பதில்: ஏன்? ஏன்? எதற்காக வெளியேற்ற வேண்டும். ஏன் வெளியேற்ற வேண்டும்? (நோ.. நோ.. என்று அரை டஜன் முறை சொல்கிறார் பொம்மை) உங்களைப் போன்ற பத்திரிகையாளர்களின் ஆசை இது. அவர் ஜனதா தளத்தை உருவாக்குவதில் பங்கு வகித்தவர். அதன் வளர்ச்சிக்குப் பாடுபட்டவர். நெருக்கடி வரும் போது கட்சித் தலைமையின் சொல்லுக்குக் கட்டுப்படுபவர். கட்டுப்பாட்டை மீறுபவர் யாராக இருந்தாலும், அது பிரதமராக இருந்தாலும் சரி, துணைப் பிரதமராக இருந்தாலும் சரி, இல்லை நானாகவே இருந்தாலும் சரி, தகுந்த ஒழுங்கு நடவடிக்கையை எதிர்கொள்ள வேண்டும். இந்த விஷயத்தில் நான் மிகவும் கண்டிப்பானவன். ஆனால் ஒன்றரை வயதுக் குழந்தையான ஜனதா தளத்தில் பல ஆரம்பக் கோளாறுகள் இருக்கத்தான் செய்யும்.

நிருபர்: பி. ஜெ. பி. யினரும், காங்கிரஸ் கட்சியினரும் திடீர்த் தேர்தலுக்குத் தயாராய் இருக்க வேண்டும் என்று பேசியிருக்கிறார்களே...? உங்கள் கட்சி நிற்குமா? ஆட்சி நிலைக்குமா?

பதில்: பி. ஜே. பி.க்கோ வேறு கட்சிக்கோ அத்தகைய கருத்து தெரிவிக்க முழு உரிமை உண்டு. ஆனால் அது அவர்கள் கருத்து மட்டுமே! ஜனதா தளத்தின் தலைவர் என்ற முறையில் நான் சொல்வது என்னவென்றால் பாராளுமன்றத்துக்குத் திடீர் தேர்தல் வராது. இன்றைய நிலைமையில் எந்தக் கட்சியும் தேர்தலுக்குத் தயாராக இல்லை. ஆனால் தவிர்க்க முடியாத சந்தர்ப்பத்தில் தேர்தல் வந்தாலும் எங்கள் ஜனதா தளம் தனிப்பட்ட பூரண மெஜாரிட்டியுடன் மீண்டும் பதவிக்கு வரும்.

நிருபர்: இரண்டு முரண்பட்ட கொள்கைகளை — சித்தாந்தங்களைக் கொண்ட கட்சிகளின் துணையோடு செயல்படும் உங்கள் மைனாரிட்டி அரசு மக்களுக்கு என்ன நன்மை செய்ய முடியுமென்று நினைக்கிறீர்கள்?

பதில்: ஏன் செய்ய முடியாது? விவசாயியின் விளைபொருட்களுக்கு அதிக விலை எப்படிக் கொடுத்தோம்; கடன்களை எப்படி ரத்து செய்தோம்? செய்ய முடியாது என்று சொல்லாதீர்கள் இன்னமும் பல நல்ல திட்டங்கள் தோழமைக் கட்சிகளின் ஆதர.

வோடு அறிமுகப்படுத்தப்படவிருக்கின்றன.

நிருபர்: பஞ்சாப், காஷ்மீர், ராமஜன்ம பூமி பிரச்னை...?

பதில்: அவை தேசியப் பிரச்னைகள். அவற்றில் தேசிய கருத்தொற்றுமையைத் தோற்றுவிக்க முயன்று கொண்டிருக்கிறோம். ஆனால் சமரசம் (Compromise) செய்து கொள்ள மாட்டோம். காங்கிரஸுக்குப் பாராளுமன்றத்தில் மிருக பலம் இருந்தது. ஆனால் பிரச்னைகளைத் தீர்க்க முடிந்ததா? ஆறு மாதங்களுக்கு ஒருமுறை மாநில முதல்வர்களை மாற்றுவதும்; ஆறு முறை நிதிய மைச்சரை மாற்றுவதும், பத்து முறை அமைச்சரவை மாற்றங்கள் செய்வதுமாக நிலையற்ற ஆட்சிதான் நடந்தது. ஆனால் எங்களைப் பொறுத்தவரை 'நாங்கள் மைனாரிட்டி' என்ற உண்மை நிலை உறுதிக் கொண்டிருப்பதால் எங்கள் செயல்களில், நடுநிலைமை இருக்கும், நியாயம் இருக்கும். எண்ணிக்கை (Numbers) முக்கியமல்ல. சரியான முடிவு எடுக்கும் நபர்களே முக்கியம்.

நிருபர்: விலைவாசி ஏறிக் கொண்டே போகிறதே... அத்தியாவசியப் பொருட்களின் விலை இறக்கை கட்டிக் கொண்டு பறக்கிறது.

பதில்: இதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஜனதா தள அரசு பொறுப்பேற்றுக் கொண்ட போது மூன்று வாரத்துக்குத் தேவையான அந்நியச் செலாவணி மட்டுமே கையிருப்பில் இருந்தது. நிலைமையைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்த பெருமை தந்தவதேக்கு உண்டு. அத்தியாவசியப் பொருட்களின் விலையைக் குறைக்க அரசு பல கூட்டங்களை நடத்துகிறது. நானும் கலந்து கொண்டேன். பல தீவிர நடவடிக்கைகளை அரசு எடுத்து வருகிறது.

நிருபர்: கடைசியாக ஒரு கேள்வி. குல்திப் சிங் கமிஷன் அறிக்கை அடிப்படையில் ராமகிருஷ்ண ஹெக்டே திட்டக் கமிஷன் தலைவர் பதவியிலிருந்து விலகி உள்ளார். இந்தப் பிரச்னையில் கட்சியின் நிலை என்ன?

பதில்: உள்துறை அமைச்சகம் இந்த அறிக்கையைப் பரிசீலித்துக் கொண்டு இருக்கிறது. அதன் ஆலோசனைப்படி மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கப்படும். தமது மனசாட்சிப்படி ஹெக்டே பதவியிலிருந்து விலகியிருக்கிறார். அவர் கட்சியின் முக்கிய தலைவராக இன்னும் இருக்கிறார். தொடர்ந்து கட்சிப் பணி ஆற்றுவார்.

பேட்டி: **ப்ரியன்.**

அட்டை வண்ணப்படம், படங்கள்: **உத்ரா.**

# குபீர் யுத்தம் கண்ட குவைத்

●● இங்கிலாந்தின் கட்டுப்பாட்டில் இருந்து வந்த குவைத், 1961ல் சுதந்திர மடைந்தது. 63ல் ஐ. நா. சபை உறுப்பினரா கியது.






* குவைத் அஹமத் துறைமுகத்தில் ராக்ஷஸ எண்ணெய்க் குழாய்கள்.

●● யுத்தத்துக்கு முன் குவைத், மன்னராட்சியில்தான் இருந்து வந்தது. ஷேக் ஜாபர் அல் அகமது அல் சபா கடைசியாக ஆண்டு வந்தார். ஐம்பது உறுப்பினர் கொண்ட தேசிய சட்டசபை உண்டு. உறுப்பினர்கள் பதவிக் காலம் நான்காண்டுகள். ராணுவம் மற்றும் போலீஸ்காரர்களுக்குக் குவைத்தில் வாக்குரிமை கிடையாது!

●● அரசாங்க மொழி அராபிக் என்றாலும் கூட, பரவலாய் ஆங்கிலம் பேசப்படுகிறது.

●● தலைநகர் – குவைத் நகரம். மூன்று மாகாணங்கள் உண்டு. அவை குவைத், ஹவால்லி, அமாதி.

●● குவைத் நாட்டின் ராணுவம் மிகச் சிறியது. தரைப் படையில் 18,500 பேர்; கடற் படையில் 500 பேர்; விமானப் படையில் 1000 பேர்.

●● குவைத்தின் பொருளாதாரம் அதன் பெட்ரோலியம் எண்ணெய் வளத்தை ஆதாரமாய்க் கொண்டது. தனியார் கம்பெனிகள் சில இருந்தாலும் கூட, அரசுக்குச் சொந்தமான குவைத் ஆயில் கார்ப்பரேஷன்தான் 90 சதம் எண்ணெய் வர்த்தகத்தைக் கவனிக்கிறது.

●● குவைத் நாட்டில் ரயில்கள் கிடையாது. உள்நாட்டு விமானப் போக்குவரத்தும் கிடையாது. அயல்நாட்டு விமான சேவைக்குக் குவைத் ஏர்வேஸ் உள்ளது.

●● வெங்காயம், தக்காளி, தர்பூசணி இவை பெருமளவில் உற்பத்தி செய்யப்படுகின்றன. பெரும்பாலான தேவைகள் இறக்குமதிதான் செய்யப்படுகின்றன.

●● பெட்ரோலியம், மற்றும் பெட்ரோலியப் பொருட்களும்தான் ஏற்றுமதி செய்யப்படுபவை.

●● நாணயத்துக்கு தினார் என்று பெயர்.

●● நாடு முழுவதும் வெள்ளிக் கிழமை வார விடுமுறை. வேறு ஏதாவது ஒரு விடுமுறை தினம், வெள்ளிக் கிழமையில் வந்து விட்டால், சனிக் கிழமையும் லீவுதான். வியாழக் கிழமை அரை நாள்.

●● அரசு அலுவலகங்கள் அக்டோபர் முதல் ஏப்ரல் வரை காலை ஏழரை முதல் பகல் ஒன்றரை வரையும், மே முதல் செப்டம்பர் வரை ஏழு முதல் ஒன்று வரையும் இயங்கும்.

●● குவைத்தில் வேலை செய்பவர்களில் ஐம்பது சதத்துக்கு அதிகமானோர் அயல் நாட்டிலிருந்து வேலை தேடி வந்தவர்கள் தான். ஒரே ஒரு சதவீதத்தினர்தான் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளனர்.

தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி.**
நன்றி: **குவைத் ஏர்வேஸ்.**

# இணைந்த கைகள்



• நடராஜன்



• செந்தூர் பாண்டி





• கார்த்திகேயன்



• ஏ. டி. சேகர்

**ஏ. செந்தூர் பாண்டி:** (உறுப்பினர், விஜயகாந்த் ரசிகர் மன்றம்):

பழைய காலத்திலே நம்ம பாட்டி சொல்கின்ற கதைதான். ஒரு பெரிய்ய... ஆற்றைக் கடந்தால் இரண்டு மலை வரும். அதையும் தாண்டிப் போனால் ஒரு முனிவர் இருப்பார். அவரிடம் கேட்டால் ஜெயில் இருக்கின்ற இடத்தைச் சொல்வார். அந்த ஜெயிலுக்குள்ளேதான் ராஜா இருப்பார். அந்த ராஜாகிட்டத்தான் அந்த மோதிரம் இருக்கு...! இந்தக் கதையை ஆபாவாணன் இங்கிலீஷ் படப் பாணியில் எடுக்க முயற்சி பண்ணியிருக்கார்.

ராம்கி கயிற்றைக் கட்டி இரண்டு மலைகளுக்கு இடையே உள்ள ஆற்றைக் கடக்கின்ற காட்சி இங்கிலீஷ் பட பாதிப்புன்னாலும் அமர்க்களமா இருந்துச்சு. ஆனா இருவரும் எப்படி ஆற்றைக் கடக்கிறாங்க என்பதை இடைவேளைக்குப் பிறகு

காட்டவே இல்லையே!

**பூக்கடை நடராஜன்:** (மாநிலத் தலைவர், விஜயகாந்த் ரசிகர் மன்றம்):

ஜெயிலிலிருந்து விடுதலையாகி வருகின்ற அசோக்கை ரயில்வே ஸ்டேஷனிலிருந்து துரத்திக்கிட்டுப் போய்க் கொல்கின்ற முதல் காட்சியே திகில்! அடுத்து ராம்கியைப் பிடிக்கப் போலீஸ் டிபார்ட்மெண்ட் பயங்கரமாகத் திட்டம் போடுவதைப் பார்த்ததும் ஏதோ வெயிட்டா விஷயம் வச்சிருக்காங்கன்னு நினைச்சேன். ஆனால் அதற்கு பின்பு போலீஸ் என்னவாச்சு என்றே தெரியல்லை! திரைக்கதையில ஒழுங்கில்லை. ராம்கிக்குக் கொடுக்கப்பட்ட கேரெக்டர்க்குத் தகுந்த மிடுக்கோ, துடிப்போ இல்லாம வழக்கம் போல 'தேமே'ன்னு இருக்கார்.

**என். ஆர். கார்த்திகேயன்:** (மாவட்டச் செயலாளர், ரஜினி ரசிகர் நற்பணி மன்றம்):

கேரெக்டர்களை அறிமுகப்படுத்துற சீன்கள் எல்லாமே நல்லா இருக்கு. உதாரணமா அருண் பாண்டியனை அறிமுகப் படுத்துற சீன்லே தியேட்டரே ஒரே கலகலப்பாகிப் போகுதே! சண்டைக் காட்சி அமைப்புக்கள் பிரமாதம்! சில இடங்களிலே இங்கிலீஷ் படம் மாதிரியேதான் இருந்தது. ஆனாலும் ராம்கிகிட்டேயும் அருண் பாண்டியண்டேயும் பைட்டிங் செய்யும் போது வேகமான மூவ்மெண்ட்டே கிடையாது. பேக்கிரவுண்ட் மியூசிக் போட்டு, சண்டையைப் பெரிசாக் காட்டிக்கிறாங்க!

**ஏ. சி. சேகர்:** (தலைவர், சென்னை மாவட்ட ரஜினி ரசிகர் நற்பணி மன்றம்):

லொகேஷன் எப்படித்தான் தேடிப் பிடித்தார்களோ இன்னும் அப்படியே கண்ணுக்குள் இருக்கின்றன! பாட்டுகள் அதிகம் தான். ஊமை விழிகள், செந்தூரப் பூவே, பட மெட்டுகளிலிருந்து கொஞ்சம் கொஞ்சம் எடுத்துப் போட்டது மாதிரி இருந்தாலும் அந்தப் படங்கள் மாதிரி பாடல்களைத் தியேட்டரை விட்டு வந்தும் முணுமுணுக்க முடியவில்லை. பெண்களிடம் அனுதாபம் பெற வேண்டும் என்பதற்காக அருண் பாண்டியனையும் நிரோஷாவையும் சாகடித்துள்ளார்கள்! கடைசியில் ரயில்வே ஸ்டேஷனில் கால் மணி நேரம் பயங்கரமாய் அடித்து நொறுக்கிய பிறகு எங்கோ போய் போலீசைக் கூப்பிட்டு வருகிறார்களாம்! நம்ப முடியவில்லை! ஆனாலும் மூன்று மணி நேரம் போர் அடிக்காமல் விறுவிறுப்பாய்ச் செய்து விட்டார்களே!

தொகுப்பு: **எஸ். பாலு**

---

## பரவசப்படுத்திய பொன்னியின் செல்வன்

• பொன்னியின் செல்வன் முடிந்துவிடுமோ என்று துடிக்கும் இதயத்துடன் (தொடரும்) என்ற இடத்தைத்தான் பார்ப்பேன். அதைப் பார்த்த பின்தான் சீராக மூச்சு வரும். இந்த வாரம் 'வீரனே உன்னிடமிருந்து தற்சமயம் விடைபெற்றுக் கொள்கிறோம்' என்ற வார்த்தைகளைப் படித்த போது என்னால் அழுகையைக் கட்டுப்படுத்தவே முடியவில்லை. என் அப்பா இந்தக் கதையைப் படித்துத்தான் எங்களுக்கு வானதி, குந்தவை, பூங்குழலி, என்று பெயர் வைத்தார்கள்.

கிருஷ்ணகிரி, எஸ். பூங்குழலி.

• அனைத்துக் கதாபாத்திரங்களும் எங்கள் கண்முன்னே உயிரோவியமாக உலா வந்தனர். இந்தப் பெருமை ஓவியர் மணியம் அவர்களுக்குத்தான்! அமரம் புரிந்து அமரர்களாகிவிட்ட கல்கி மற்றும் மணியம் என்னும் மாபெரும் மனிதர்கள் என்றென்றும் எங்கள் இதயக் கோவிலில் கொலு வீற்றிருப்பார்கள்.

திருவிடைமருதூர்,

எஸ். நாதன்பாபு.

• வேறொரு காவியத்தில் நெஞ்சில் நிழலாடும் இவ்வகைப் பாத்திரங்களைக் காண்போமா என்பது சந்தேகம்தான். ஏறக்குறைய மூன்றரை ஆண்டுகள் ஒரு மணித்துளி போல் போய் விட்டது அதிசயம்தான். மூன்றரையாண்டுகளாக எங்கள் வாழ்க்கைப் பாதையில் கலந்து கொண்டு, எங்களின் சுகதுக்கங்களில் பங்கெடுத்து வந்த நண்பர்களுக்கு நினைவுகளை நெஞ்சில் நிறுத்திப் பிரியா விடை கொடுக்கிறோம். மகா காவியம் படைத்த கல்கி மறைய மாட்டார்.

மதுரை — 2. சுந்தரராஜன்.

• பொன்னியின் செல்வன் முடிவுரையைப் படித்ததும், இவ்வளவு பெரிய படைப்பாளி தன்னடக்கத்திற்கே எடுத்துக் காட்டாகத் திகழ்ந்திருக்கிறாரே! என்று நெகிழ்ந்து போனேன்.

கம்பம், செ. வைப்ரசி கண்ணன்.

• புதைந்து கிடக்கும் சரித்திரச் சம்பவங்களுக்குப் புத்துயிர் தந்து, மீண்டும் நம் முன் அந்தச் சரித்திர காலத்தைக் கொண்டு வந்து, பரவசத்தில் ஆழ்த்திய 'பொன்னியின் செல்வன்' என்ற இவ்வளவு பெரிய சரித்திர நாவல் நிறைவு பெற்றபோது 'அடடா... இதற்குள் முடிந்து விட்டதே' என்ற ஏக்கம்தான் ஏற்பட்டது.

முடிகண்டநல்லூர்,

க. ராஜேந்திரன்.

• ஒரு சரித்திர நாவல் எப்படியிருக்க வேண்டும் என்பதற்கு ஓர் அட்டகாசமான உதாரணமாகத் திகழ்கிறது, 'பொன்னியின் செல்வன்'. அமரர் கல்கியின் ஈடு இணையற்ற இந்தச் சரித்திர நாவல் இனி என் இதயத்தில் என்றென்றும் உயிரோட்டமாக நிலைத்து நிற்கும்.

வடுகவிருட்சியூர், ஆர். அமுதா.





வளமிக்க மணல்

# மணலுக்கு ஓர் ஆலை! மனத்தில் ஒரு கவலை!

கயிறு திரிக்கப் போக, ஒரு மணலாலை உருவானது என்று சொன்னால், நம்புவீர்களா? 'மணல் கயிறு திரிக்காதீங்க சார்!' என்பீர்கள். ஆனால், மணவாளக் குறிச்சியில் உள்ள Indian Rare Earths மணலாலைக்கு வித்திட்டது கயிறு திரிக்கும் தொழில் தான்:

சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன் மணவாளக்குறிச்சியிலும்இப்போதையகன்னியாகுமரி மாவட்டத்தின் இதர கடலோரக் கிராமங்களிலும் தென்னை நாரைக் கொண்டு கயிறு திரிக்கும் தொழில் நடைபெற்றது. உற்பத்தியான கயிறு குளச்சல் துறைமுகம் வழியே அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது.

கயிறு திரிக்கும் போது கைகள் வழுக்காமல் இருக்க, கிராமத் தொழிலாளர்கள் தங்கள் காலடியில் கிடந்த கடற்கரை மணலைத் தொட்டுக் கொள்வார்கள். அந்த மணலில் சிறிதளவு கயிற்றோடு ஒட்டிக் கொண்டு கடல் கடந்து செல்லும். சில வியாபாரிகள் கயிறு எடையைக் கூடுதலாக்க, வேண்டுமென்றே கொஞ்சம் மணலைக் கயிறுக் கட்டுக்களில் கலந்தும் வந்தார்கள். இந்த வழியில் அக்கரைச் சீமைகளுக்குச் சென்று சேர்ந்தது மணவாளக் குறிச்சி மணல்.

ஜெர்மானியக் கிடங்கு ஒன்றில், மணலோடு வந்திறங்கிய கயிறுகள் வைக்கப் பட்டிருந்தன. ஏதோ காரணமாக அந்தப் பக்கம் வந்த ஒரு விஞ்ஞானி தரையில் விழுந்திருந்த மணலைப் பார்த்தார். கறுப்பு, மஞ்சள் நிறங்களில் இருந்த மணல் உடனே அவர் கவனத்தைக் கவர்ந்தது. அவற்றை அந்த ஜெர்மானிய விஞ்ஞானி சோம்பர்க் (Schomberg) முறையே 'இல்மனைட்' என்றும், 'மோனசைட்' என்றும் கண்டறிந்தார். இது நடந்தது 1909 இல்.

உடனே சோம்பர்க் இந்தியாவுக்கு வந்தார். திருவிதாங்கூர் மன்னர் உதவியோடு மணவாளக் குறிச்சியில் ஒரு நிறுவனத்தை அமைத்துக் கடற்கரை மணலிலிருந்து மோனசைட்டைப் பிரித்தெடுக்கும் தொழிலைத் தொடங்கினார். நவீன உபகரணங்கள் இல்லாத நிலையில், அரிசி புடைக்கும் முறத்தைப் பயன்படுத்தி மணலைப் பிரித்தார்கள். பிரித்தெடுக்கப்பட்ட மோனசைட், கேஸ் விளக்கு 'மாண்டல்' (gas light mantles) தயாரிக்கப் பயன்படுத்தப் பட்டது.

இரண்டாம் உலக யுத்தம் ஆரம்பமாகியது. சோம்பர்க் கைதானார். நம் நாடு சுதந்திரம் அடைந்த பிறகு, மோனசைட் ஏற்றுமதி தடை செய்யப்பட்டது. ஆல்வாயில் ஓர் ஆலை நிறுவி மணவாளக் குறிச்சியில் கிடைக்கும் மோனசைட்டிலிருந்து யூரேனியம், தோரியம் போன்றவற்றைப் பிரித்தெடுத்து, பம்பாயிலுள்ள பாபா அணு ஆராய்ச்சி மையத்துக்கு அனுப்ப ஏற்பாடுகள் நடந்தன. மணலில் கிடைக்கும் இல்மனைட், சிர்கான், ருட்டைல் போன்ற இதர மூலகங்கள் மட்டும் ஏற்றுமதியாக அனுமதிக்கப்பட்டன.

சோம்பர்க் 1909 ஆம் ஆண்டில் அமைத்த முதல் மணலாலை இருந்த அதே இடத்தில்தான் இப்போது இருக்கிறது நவீனமயமாக்கப்பட்ட Indian Rare Earths நிறுவனம்.

இந் நிறுவனத்தில், கடல் மணலிலிருந்து இல்மனைட் மோனசைட் போன்றவற்றைத் தனியே பிரித்தெடுக்கும் தொழில் நடைபெறுகிறது. இவற்றுள் மஞ்சள் நிறமான மோனசைட்டில் கதிரியக்கத்தை உண்டு பண்ணும் தோரியம் — 232 யுரேனியம் — 233 ஆகியன உள்ளதால், இப் பகுதியில் வாழும் மக்கள் பாதிக்கப்படுகிறார்களா? இந் நிறுவனத்தில் கதிரியக்கத்தால் பாதிக்கப்பட்ட நாற்பது தொழிலாளர்களைப் பரிசோதனை செய்ய பம்பாயிலிருந்து மருத்துவ நிபுணர்கள் குழு வரவழைக்கப் பட்டது என்ற 'செய்தி' வந்துள்ளதே? அக் குழுவின் கண்டுபிடிப்புகள் என்ன? ...இந்தக் கேள்விகளுக்கு விடை தேடி மண

• டாக்டர் கோபகுமார்



• வேலாயுதன்



• கோவிந்த பிள்ளை



• ஆல்பர்ட்



• அம்புஜாலன்



வாளக் குறிச்சி சென்றோம்.

மணவாலைக்குத் தேவையான மணல் அதன் அருகேயே உள்ள சின்னவிளை என்னும் ஊரிலிருந்து தோண்டி எடுக்கப் படுகிறது. அவ்வூர் சிறுவர் சிறுமியர் மணலில் வீடு கட்டியும் ஓடி ஆடியும் விளையாடிக் கொண்டிருந்தார்கள். மோனஸைட் கலந்த மணற்குவியல்களாலும் ஆலையின் அருகாமையினாலும் மக்கள் பாதிக்கப்பட்டதாகத் தெரியவில்லை.

மணவாளக்குறிச்சி பேரூராட்சித் துணைத் தலைவர் வி. ஆல்பர்ட் "எனக்குத் தெரிந்தவரை கதிரியக்கப் பாதிப்பு இங்கு கிடையாது. ஆனால், மணலாலை அருகிலிருப்பதால் நமக்குக் 'கான்சர்' வந்துவிடுமோ என்ற பயம் மக்களிடையே உள்ளது. பயத்தைப் போக்கி, விஷயத்தைத் தெளிவாக்க வேண்டியது மணலாலை நிர்வாகத்தின் பொறுப்பு. ஆண்டுக்கொரு முறை இப் பகுதியில் வாழும் மக்களை மருத்துவ வல்லுனர்களைக் கொண்டு பரிசோதிக்கச் செய்யலாம்..." என்றார்.

"பள்ளிக்கூடச் சிறுவர்களை ஆண்டுதோறும் பரிசோதனை செய்வதுண்டு. அந்த மருத்துவப் பரிசோதனையில் பயப்படும்படியாக எதுவுமே வெளிப்படவில்லை" என்றார் பாபுஜி நினைவு அரசு மேல்நிலைப் பள்ளியின் முன்னாள் தலைமையாசிரியர் ஒருவர்.

இந்தியன் ரேர் எர்த்ஸ்இன் துணைப் பொது மேலாளர் பி. கோவிந்த பிள்ளையைச் சந்தித்தோம்.

"ஊர் மக்கள் பயப்பட அவசியமே இல்லை. மோனஸைட்டில் கதிரியக்கம் உள்ளது உண்மைதான் என்றாலும் அது தொழிலாளர்களையோ பொது மக்களையோ பாதிக்காது. ஏனெனில் இந்த மணற்பரப்பிலுள்ள கதிரியக்கம் வாய்ந்த மோனஸைட்டின் அளவு இரண்டிலிருந்து மூன்று சதவிகிதம்தான்.

"எந்தத் தொழிலாளரும் கதிரியக்கத்தால் பாதிக்கப்படவில்லை. மோனஸைட் பிரிவில் 210 பேர் வேலை செய்கிறார்கள். அவர்களிடமே நீங்கள் கேட்கலாம். பம்பாயிலிருந்து மருத்துவக் குழு எதுவும் வரவில்லை. ஜூலை 2, 3 தேதிகளில், காஞ்சிபுரத்துப் புற்றுநோய் சென்டரிலிருந்து மருத்துவக் குழு ஒன்று இங்கு வந்து முகாமிட்டிருந்தது. அக் குழுவின் ஆய்வுப்படியும் இங்கே கதிரியக்கப் பாதிப்பு இல்லை என்றே முடிவாகியுள்ளது. அக் குழு மாவட்ட கலெக்டருக்கு இதை உறுதிப்படுத்தியது. கலெக்டரும் ஓர் அறிக்கை விடுத்துள்ளார்" என்று அறிக்கையின் நகலைக் காட்டினார் கோவிந்த பிள்ளை.

"கதிரியக்கமுள்ள பொருள்களைக் கையாளும் போது அளவுக்கதிகமாகவே ஜாக்கிரதையாக இருப்பதுதான் நல்லது. இந்த வகையில் மணலாலைத் தொழிலாளர்களுக்கு என்ன காப்பு வசதிகள் செய்து தரப்பட்டுள்ளன...?" என்று கேட்டோம் கோவிந்த பிள்ளையிடம்.

"மோனஸைட் பிரிவைச் சேர்ந்த 210 தொழிலாளர்களுக்கும் கதிரியக்கப் பாதிப்பு உள்ளதா எனக் கண்டறியும் 'ஃபிலிம் பாட்ஜ்' **(film bodge)** அளித்திருக்கிறோம். இதை அணிந்து கொண்டுதான் அவர்கள் தினமும் வேலை செய்ய வேண்டும். இரண்டு மாதங்களுக்கு ஒருமுறை இந்த பாட்ஜை பம்பாயிலுள்ள பாபா அணு ஆராய்ச்சி மையத்துக்கு அனுப்பிப் பரிசோதனை செய்கிறோம். அப் பரிசோதனையின் அடிப்படையில் கதிரியக்கம் சற்று அதிகமாகப் பாதித்துள்ள தொழிலாளர்களை உடனே வேறு பிரிவுக்கு மாற்றுகிறோம்" என்றார் அவர்.

அப்போது அருகிலிருந்த மணலாலை மருத்துவ அதிகாரி பி. வி. கோபகுமார் கூறினார்:

"சாதாரணமாக ஆண்டொன்றுக்கு ஐம்பது மில்லி சிவர்ட்ஸ் **(50 milli sieverts)** வரையிலான கதிரியக்கத்தை ஒரு மனிதன் எந்தவிதமான விபரீத பாதிப்பும் இன்றித் தாங்கிக் கொள்ள முடியும். அதற்கு மேல் போனால்தான் கவலைப்பட வேண்டும். ஆனால் எங்கள் தொழிலாளர்களின் பாட்ஜுகளில் சராசரியாக ஐந்து மில்லி சிவர்ட்ஸ் கதிரியக்கம்தான் இதுவரை பதிவாகியுள்ளது. ஆகவே, பாதிக்கக்கூடிய அளவில் இங்கு கதிரியக்கம் இல்லையென்பது ஊர்ஜிதமாகிறதல்லவா...?"

ஆலையின் பாதுகாப்பு மேலாளர் அம்புஜாஸன், தொழிலாளர்களுக்குத் தேவையான முகமூடிகள், காலணிகள், கையுறைகள் யாவும் கவனமாக வழங்கப்படுகின்றன என்றார். தரக் கட்டுப்பாட்டு மேலாளர் டி. வேலாயுதன் தொழிலாளர்கள் பரிசோதிக்கப்படுவது போல தொழிற்சாலைப் பகுதிகளும் பரிசோதிக்கப்படுகின்றன என்றார்.

பாதுகாப்பு நடவடிக்கைகள் ஜரூராக இருப்பது அறிந்து சற்று நிம்மதி பிறந்தாலும், இதே அளவுக்கு எச்சரிக்கையுடன் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாளும் இருக்க வேண்டுமே என்ற கவலை தவிர்க்க முடியாமல் மனத்தில் எழுந்தது.

கட்டுரை, படங்கள்:

**குளச்சல் இப்ராஹிம்**

"அவரு தலை நடுவில் சொட்டை விழுந்திருக்கே ஏன்?"

"ரஜினி ஸ்டைல்ல பீடியைத் தூக்கி எறிஞ்சு வாயிலே கவ்விக் குடிக்க முயற்சி பண்ணினாராம்."

— எரியோடு அ. மு. அனந்தன்.



# தேவை

எஸ்.ஓ.எஸ் குழந்தைகள் கிராமத்தில் தாய் தந்தையற்ற குழந்தைகள் இல்லத்தில் அன்னையாகப் பணியாற்ற கீழ்க் கண்டுள்ள தகுதியுடையப் பெண்கள் தேவை.

1. திக்கற்ற நிலையில் உள்ள 25 முதல் 35 வயது வரையுள்ள விதவை/ கணவனால் கைவிடப்பட்ட/மணவிலக்குப் பெற்ற/திருமணமே செய்து கொள்ளாத தீர்மானத்தில் வாழும்,
2. தனக்கென குழந்தைகள் இல்லாத, தன்னைச் சார்ந்து வேறு எவரும் இல்லாத நிலையில் உள்ள,
3. பெற்றோர் இல்லாத அனாதை குழந்தைகளை தான் பெற்ற குழந்தைகளாக பாவித்து அன்னையாக தியாக மனப் பாங்குடன் தன்னையே அர்பணித்துக் கொள்ளும் மனநிலையுடைய,
4. ஆரம்பக் கல்வி கட்டாயமாகப் பெற்றிருத்தல் வேண்டும் (அதற்கு மேலும் படித்திருத்தல் நலம்),
5. குழந்தை வளர்ப்பில் ஈடுபாடு, குடும்ப நிர்வாகத் திறன், தெய்வபக்தி பெற்றுள்ள பெண்கள்

தேர்ந்தெடுக்கப் படும் பெண்களுக்கு உணவு, தங்குவதற்கு இடம், ஓய்வு கால நலன் பாதுகாப்பு இவற்றுடன் மாத சம்பளமும் உண்டு. கல்வித் தகுதி, குடும்பச் சூழ்நிலை பற்றிய விரிவான விபரங்களுடன் பத்து நாட்களுக்குள் விண்ணப்பிக்கவும். ஹிந்தி மற்றும் வேறு இந்திய மொழி தெரிந்தவரும் விண்ணப்பிக்கலாம்.

விண்ணப்பபாரம் வாங்க தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

இயக்குனர்

**எஸ்.ஓ.எஸ் குழந்தைகள் கிராமம்**
13, புரொபஸர்ஸ் காலனி,
தாம்பரம் கிழக்கு,
சென்னை - 600 059.


பாரு, பாரு...
பயாஸ்கோப் பாரு...
விவசாயிகள் பேரணி பாரு...
என்னோட பலத்தைப் பாரு....
தேவிலால்
அஜித்சிங்
உதம்சிங்கைப் பதவி நீக்க முயற்சி
வி.பி.சிங்
அதுவும் தப்பு,
இதுவும் தப்பு...
கண்டுக்காம
இருந்தா
எப்படி ?
அத்வானி
உன் வேலையும் சரியில்லை,
ஒண்ணும் சரியில்லை...
இந்தா,
டிஸ்மிஸ்
ஆர்டர்!
ஜனாதிபதி
பாக். இராணுவம்
ஜனநாயகத்துக்கு டிஸ்மிஸ் உத்தரவு
பெனாசிர்
மது தண்டவதே
இது பாமாயில்
ஜாதகம்...
தீபாவளிக்கு
விலை குறையுது!
இது ஜாதிக்கொட்டை
ஜாதகம்...
பொங்கலுக்கு
விலை சரியுது!
இது பருப்பு
ஜாதகம்...
அடுத்த தீபாவளிக்கு
விலை இறங்குது!
இது சிமெண்ட்
ஜாதகம்...




# கல்கி

1990 ஆகஸ்ட் 19
மலர் : 49 இதழ் 3
பிரமோதூத ஆவணி 3




## பேனசிருக்குப் பதவி போயிற்று : இந்தியாவுக்கு ஆபத்து வருகிறது !

பேனசிர் புட்டோ பதவி நீக்கம் செய்யப்பட்டதன் மூலம் பாகிஸ்தானில் ஜனநாயகத்துக்கு மீண்டும் ஒரு மரண அடி தரப்பட்டுள்ளது. பேனசிர் மீது பல குற்றச்சாட்டுக்களைச் சுமத்திப் பதவி நீக்கம் செய்ததுடன் கூடிய விரைவில் தேர்தல் நடக்கும் என்றும் ஜனாதிபதி அறிவித்திருக்கிறார். ஆனால் கடந்த கால அனுபவத்தை வைத்துப் பார்க்கும் போது ஜனாதிபதியின் உறுதிமொழியை நம்புவது கஷ்டமாக இருக்கிறது. தேர்தலை ஒத்திப் போட்டுக் கொண்டே போவதும் கூடவே ராணுவ ஆட்சி பலம் பெறுவதுமே யதார்த்தத்தில் நடக்கக் கூடியது. பேனசிர் மீது சுமத்தப்பட்டுள்ள குற்றச்சாட்டுக்களில் அர்த்தமில்லாமல் போகவில்லை என்றாலும் அவை சால்ஜாப்புக்களே. உண்மை நோக்கம் ஜனநாயகத்தை விரட்டிச் சர்வாதிகாரத்தை மீண்டும் நிலைநாட்டுவதுதான். பேனசிரும் அவரது கட்சியைச் சேர்ந்த இதர பல பிரமுகர்களும் ஏதாவது காரணங்கள் கூறப்பட்டுச் சிறைப்படுத்தப்படலாம்.

பேனசிர் புட்டோ மூலம் பாகிஸ்தானில் மீண்டும் ஜனநாயகத்துக்கு வழிவகுக்கப் பட்டபோது, நாம் மிகவும் மகிழ்ச்சி அடைந்தோம். நமது அண்டை நாட்டிலும் ஜனநாயகம் தழைப்பதே நமக்கும் நல்லது என்று கருதி வரவேற்றோம். ஆனால் துரதிர்ஷ்டவசமாக, அவர் மிகக் குறுகிய காலத்தில் பதவி இழக்க நேர்ந்ததுடன் பாகிஸ்தானில் நெருக்கடி நிலையும் பிரகடனப்படுத்தப்பட்டுள்ளது. ஓர் அற்புதம் நிகழ்ந்தால்தான் உண்டு, இல்லையேல் பேனசிரின் வெளியேற்றத்துடன் பாகிஸ்தானில் ஜனநாயகமும் வெளியேறி விட்டதாகவே கருதலாம்.

பேனசிர் இந்த முடிவைத் தாமே தேடிக் கொண்டார் என்று ஒரு வாதத்தை முன் வைப்பதிலும் தவறில்லை. ஏனெனில், நாட்டில் நிலவிய பல முக்கிய பிரச்னைகள் அவரால் கவனிக்கப்படாமலும் தீர்க்கப்படாமலுமே போயின. காஷ்மீர் பிரச்னையைக் கிளறி விட்டுக் கொண்டு அதன் மூலம் விலைவாசி உயர்வு, சிந்து மாகாணத்தில் கிளர்ச்சி போன்ற பல பிரச்னைகளிலிருந்து மக்களின் கவனத்தைத் திசை திருப்ப முயன்றார். அவரது ஆட்சி சிறப்பாக அமைந்து, பிரச்னைகளை அவர் சமாளித்திருந்தால் ஜனாதிபதிக்கு அவரை வெளியேற்றத் துணிவு வந்திருக்காது; காரணமும் அகப்பட்டிராது.

ஆயினும் ஜனநாயகத்தில் பதவி இழப்பு என்பதும் ஜனநாயக முறைப்படி நடப்பதுதான் நல்லது. இன்னும் சில தினங்களில் நாடாளுமன்றத்தைச் சந்திக்க இருந்தார் பேனசிர். ஒருவேளை அவர் அங்கே நம்பிக்கை வோட்டு பெற்று விடக் கூடும் என்று அஞ்சியே, அதைத் தவிர்க்கும் நோக்கில் இந்த டிஸ்மிஸ் உத்தரவை இப்போது ஜனாதிபதி பிறப்பித்திருக்கலாம்.

பேனஸிர் போதிய அளவு திறமையாக ஆட்சி புரியவில்லை என்பது ஒரு புறமிருந்தாலும் இந்த ஜனநாயகப் படுகொலை நமக்கு மிகுந்த வருத்தத்தை அளிக்கிறது. மேலும் இதில் இந்தியாவுக்கு ஓர் எச்சரிக்கையும் உண்டு. பேனசிராலேயே காஷ்மீர் பிரச்னையைக் கிண்டிக் கிளறி விடுவதைத் தவிர்க்க முடியவில்லையெனில், அடுத்து ஆட்சியில் செல்வாக்கும் பலமும் பெறக்கூடிய ராணுவத் தலைமை காஷ்மீர் பிரச்னையை மேலும் தீவிரமாக்கவே செய்யும். இதனை எதிர்கொள்ள இந்தியா தயாராக வேண்டும். பாகிஸ்தானின் உள்நாட்டு விவகாரங்களில் நாம் தலையிடக் கூடாது என்றாலும், அந்த உள்நாட்டு விவகாரங்களை நுணுகி ஆராயாமலும் அவற்றால் நமக்கு ஏற்படக்கூடிய ஆபத்துக்களைக் குறித்துச் சிந்திக்காமலும் நாம் இருந்து விட முடியாது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# EXTRA+ EVERY MONTH



ஒரு கோழிமுட்டைக்குள் இரண்டு குஞ்சுகளா ? இதென்ன வேடிக்கை ? நடக்கக் கூடியதா என்று யோசிக்கிறீர்களா ?' ஆனால்-R.B.F. உறுப்பினர்கள் மட்டும் இதன் ரகசியத்தை நன்கறிவார்கள். உறுப்பினர்களின் முதலீட்டுத் தொகையை வளமான செல்வமாக்கித் தருகிறது R.B.F. வேறு எந்த நிதி நிறுவனங்களைக் காட்டிலும் அதிகப்படியான கூடுதல் வட்டி ஒவ்வொரு மாதமும் சேர்த்தளிக்கிறது. நிலையான பாதுகாப்பையும் மேலும் மேலும் கூடுதலான வட்டியும் பல சலுகைகளையும் ஏற்படுத்தித் தருகிறது ! புதுமையான பல திட்டங்களின் மூலம் உங்கள் எதிர்கால நம்பிக்கைக்கும் வழி காட்டுகிறது !

**★ உங்கள் சேமிப்பு இருமடங்காகிறது 4 ஆண்டுகளில்**

ரூ. 5000 செலுத்தி ரூ. 10,000 பெறுவீர்.
ரூ. 10,000 செலுத்தி ரூ. 20,000 பெறுவீர்.

**★ ஓய்வூதியம் பெறுவோர்க்கு ஓர் மகத்தான திட்டம்**

| | | |
|---|---|---|
| **இத்திட்டத்தின் கீழ் நீங்கள் பெறும் வட்டி** | **17.5% வரை** | மாத வட்டிக்கான காசோலை வருடம் முழுமைக்கும் முன்னதாகவே அளிக்கப்படும். (ஒரு வருட முதலீட்டிற்கும் இந்த வாய்ப்பு உண்டு.) |

இத்திட்டத்தால் ஓய்வூதியம் பெறுவோர்கள், விதவைகள்,
ஊனமுற்றவர்கள் அனைவரும் பயன் பெறலாம்.

## ★ "பேரனை குபேரனாக்குங்கள்" முதலீடு திட்டம்.

| வைப்புத் தொகை | காலம் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 7 வருடம் | 9 வருடம் | 11 வருடம் | 15 வருடம் | 18 வருடம் | 21 வருடம் |
| 3000 | 10200 | 14400 | 20400 | 40800 | 69000 | 120000 |
| 4000 | 13600 | 19200 | 27200 | 54400 | 92000 | 160000 |
| 5000 | 17000 | 24000 | 34000 | 68000 | 115000 | 200000 |
| 7500 | 25500 | 36000 | 51000 | 102000 | 172500 | 300000 |

## ★ நிரந்தர வைப்பு முதலீட்டுத் திட்டம்

| காலம் | 3 மாதங்கள் | 6 மாதங்கள் | 1 ஆண்டு | 2 ஆண்டுகள் | 3 ஆண்டுகள் |
|---|---|---|---|---|---|
| ஆண்டுக்கு வட்டி விகிதம் | 12% | 13.5% | 15% | 16.5% | 17% |

ரூ. 14,000க்கும் அதற்கு மேலும் உள்ள தொகைக்கு ½% கூடுதல் வட்டி அளிக்கிறோம்.

## ★ உங்கள் சேமிப்புக் கணக்குக்கு 10.5% வட்டி அளிக்கிறோம்.

வட்டி தினசரி கணக்கில் இருக்கும் தொகைக்கு கணக்கிடப்படும்.
உங்கள் தேவைக்கு கடன் எங்கும் கிடைக்கவில்லையா? எங்களிடம் வாருங்கள்
உங்கள் பணத் தேவைக்கு நாங்கள் உதவுகிறோம்.

## ★ தங்க நகைகளின் பேரில் கடன் எவ்வளவு தொகை வேண்டுமானாலும் எல்லா நாட்களிலும் கிடைக்கும்.

ஒரு சவரனுக்கு ரூ. 1.800 வரை கடன் வழங்கப்படும். 19.8% வருட வட்டி வசூலிக்கப்படும்.

நகைகளின் பேரில் வாங்கிய கடனை திருப்பி செலுத்தியதும் அதே நாளில் உங்கள் நகைகள் உங்களிடம் திருப்பிக் கொடுக்கப்படும்.

* ஒரு ரூபாய் பங்குதாரர்களுக்கு மட்டும் உரியது.

# இராயப்பேட்டை பெனிபிட் பண்டு லிமிடெட்

மத்திய அரசின் "நிதி கம்பெனி" என்ற அங்கீகாரம் பெற்றவர்கள்.

பதிவு அலுவலகம் : Y.M.C.A. கட்டிடம், வெஸ்ட்காட் சாலை,
(இராயப்பேட்டை மருத்துவமனை எதிரில்)
இராயப்பேட்டை, சென்னை-600 014. தொலைபேசி எண் : 831755 & 831180

out roots run deep

அலுவலக நேரம் :
வார நாட்களில் : காலை 8.30 மணி முதல் மாலை 5 மணி வரை
ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 8.30 மணி முதல் நண்பகல் 1.00 மணி வரை

வார விடுமுறை :
Y.M.C.A. கட்டிட அலுவலகம்-வெள்ளிக்கிழமை
கோகலே பவன் அலுவலகம்-செவ்வாய்க்கிழமை

**V.E. மரகதவேலு,**
டைரக்டர், டிரஸ்டி

**S. சுப்பிரமணியன்**
எக்ஸிகியூடிவ் சேர்மேன்

உங்களுக்கு மேலும் சிறப்பாக, விரைவாக பணியாற்றிட 29.6.90 முதல் "கோகலே பவன்", வெஸ்ட்காட் சாலை, இராயப்பேட்டை, சென்னை-600 014ல் எங்களது சொந்த இடத்தில் புதிய அலுவலகம் செயல்படுகிறது.

# முதுகெலும்பு

'வி.பி.சிங் முதுகெலும்பு இல்லாதவர்'
– தேவிலால்




கருத்து: ஜலி



# மைக்குப் பின்னால் நடிக்கிறார்கள்!

"புது இயக்குனரின் முதல் படமாயிற்றே! ஹீரோ இமேஜ் இல்லாத புதிய நடிகருடன் இணைந்து நடிக்க வேண்டுமே என்ற சந்தேகமோ பயமோ கொஞ்சம் கூட இல்லாமல்தான் 'கேளடி கண்மணி' படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டேன்" என்கிறார் ராதிகா.

"எஸ். பி. பிக்கு இது முதல் படமல்ல; ஏற்கெனவே தெலுங்கில் நடித்திருக்கிறார். மேலும் பின்னணிப் பாடகர்களும் நடிகர்கள்தான். நாங்கள் காமெரா முன்னால் நடிக்கிறோம்; இவர்கள் மைக்குக்குப் பின்னால் நடிக்கிறார்கள். எத்தனை எத்தனை நடிகர்களுக்கு எத்தனை விதமான உணர்ச்சிகளில் குரல் கொடுத்திருக்கிறார் எஸ். பி. பி! அத்தனை அனுபவமும் 'கேளடி கண்மணி' யில் அவருக்குக் கைகொடுத்தது. அதனால் மிகப் பிரமாதமாக அவரால் நடிக்க முடிந்தது. ஹீரோ என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று சட்ட திட்டம் கிடையாது. சிக்கலான கதா பாத்திரத்தை ஏற்று, அதை வெற்றிகரமாக நடித்துக் காட்டுகிறவரும் ஹீரோதான்!

"இயக்குனர் வஸந்த் பாலசந்தரின் சிஷ்யரல்லவா! அதனால் அவர் என்னை அணுகிய போது அவர் திறமையில் துளிச் சந்தேகம் கூட எனக்கு எழவில்லை. கதையை அவர் விவரித்த உடனே இது வெற்றிப் படத்துக்கான கதை என்று புரிந்து கொண்டு விட்டேன். பிற்பாடு காட்சிகளை அவர் அமைத்த விதமும் எனக்கு மிகவும் பிடித்திருந்தது.

"புகழ்பெற்ற ஆர்டிஸ்டுகள் புதியவர்களுக்குப் பணியாற்ற யோசித்தால், புதியவர்கள் வளர்வது எப்படி? 'பதினாறு வயதினிலே' படத்தில் நடிக்க கமலஹாசனும் ஸ்ரீதேவியும் மறுத்திருந்தால், எங்களைப் போன்ற பல நட்சத்திரங்களை உருவாக்கிய ஒரு பாரதிராஜா இத்தனை வேகமாக உயர்ந்திருப்பாரா?" என்கிறார் திரையுலகிற்குப் புதியவர்களை வரவேற்கும் ராதிகா.

— நிகிலா ராஜா.




**COUNT DOWN — 21**

# "பிலிளைஸ் போர்வையில் பசுக்குதிரை!"

**சா**ந்தினி மிகச் சுலபமாக அந்தக் கூட்டத்தில் கலந்து விட்டாள்.

அச்சுதன் ஸ்தம்பித்து, துவஜஸ்தம்பம் போல் நின்றான்.

சாந்தினி அந்த உறையை என்ன செய்வாள்? உடனடியாகக் கை மாற்றுவாள். நிச்சயம் பக்கத்துத் தபால் பெட்டியில் போடப் போவதில்லை. பொறுப்பான யாரிடமாவது தான் கொடுத்தாக வேண்டும். ஓர் இளம் பிராயத்துப்பெண்ணை இருட்டில், இன்றைய தில்லியில் அலைய விடுமளவுக்கு அவள் அண்ணன் முட்டாளாயிருக்க மாட்டான். இங்கேதான் எங்காவது இருப்பான். அது முதல் விஷயம்.

அமீர் ஜவஹரின் பின்னணியைக் கவனித்ததில் அவனிடம் இரண்டு கார்கள் உண்டென்பது தெரிய வந்திருக்கிறது. அப்படியானால் அவன் கார்களில் ஒன்றாவது இங்கேதான் பக்கத்தில் நிறுத்தப் பட்டிருக்கக்கூடும். இது இரண்டாவது விஷயம்.

அச்சுதன் சாந்தினி சௌக்கின் சந்துகளில் மிக வேகமாக நடந்தான். அவன் நடந்த பாதையில் நடைபாதைக்கே வந்து முடிந்த மர ஏணி குறுக்கிட்டது. அவன் மூளையில் ஒரு பிரகாச மின்னல். மரப்படிகளில் வேகமாக ஏறினான். கடைகளின் தலைமண்டைப் பக்கத்தில் நின்று நான்கு பக்கங்களிலும் பார்த்தான். அவன் நின்ற இடம் கலங்கரை விளக்கம் போல் கொஞ்சம் உயரமான இடம். சுற்றி மனிதர்கள் நடமாடுவதை, வாகனங்கள் ஓடுவதையெல்லாம் காணமுடிகிற இடம். அச்சுதனின் விசுவாசம் வீண்போகவில்லை.

அதோ!

விளக்குத் தூணுக்கு அருகே ஒரு சாம்பல் நீல மாருதி நின்றிருந்தது. அதன் கதவு திறந்திருந்தது. பக்கத்தில் பொறுமையில்லாமல் அமீர் ஜவஹர் நின்று கொண்டிருந்தான்.

அச்சுதன் விழுகிற வேகத்தில் மர ஏணியிலிருந்து இறங்கினான். தன் மோட்டார் சைக்கிளை நோக்கி ஓடினான். வண்டியை நிமிர்த்தி அவன் அதில் இருக்கத் தொடங்கிய நேரத்தில், சாந்தினி அமீர் ஜவஹரை நெருங்கினாள். மல்ஹோத்ராவிடமிருந்து அவள் கைக்கு மாறிய உறையை அவனிடம் தூக்கிப் போட்டு விட்டு மேலே நடந்தாள். பக்கத்தில் நின்ற ஒரு பச்சை ஃபியட்டின் கதவைத் திறந்தாள்.

அச்சுதன் சாந்தினியைத் தன் இலக்கிலிருந்து விலக்கினான். அமீர் ஜவஹரை மடக்க முடிவு செய்தான்.

**மா**ருதி, முகர்ஜி மார்கை வட்டமடித்துச் சதார் பஸார் நோக்கித் துரிதமடைந்தது. பிரதான சாலையில் செல்லப் பிரியப் படாமல் மாருதி ஒரு 'கலி'யில் திரும்பிய போது, அச்சுதன் மோட்டார் சைக்கிளின் விளக்கை அணைத்து விட்டுத் தொடர்ந்தான். மாருதிக்கும் தனக்கும் இடையில் குறைந்த பட்சம் ஐம்பது கஜமாவது இருக்கும்படி பார்த்துக் கொண்டான்.

மோதிலால் தெருவுக்குள் மாருதி நுழைந்ததும் அதன் வேகம் குறைந்தது. இடதுபுறம் ஒதுங்கி அகலமான நடைபாதையில் இடது புறச் சக்கரங்களும், சாலையில் வலதுபுறச் சக்கரங்களும் இருக்கும் நிலையில் நின்றது.

அமீர் ஜவஹர் இறங்கினான்.

தெருவில் ஆள்படை இல்லை. மரங்களுக்கு அப்புறத்திலிருந்து, பதுங்கியிருந்த ஓர் ஆந்தை அலறியது. இருள் சமுத்திரம்.

அச்சுதன் மோட்டார்சைக்கிளை ஓர் அடர்த்தியான இருள் நிழலில் நிறுத்தினான். இறங்கி எதிர்ச்சாரி நடைபாதையில் ஒரு மழைச்சார்பின் கீழ், தன்னை மறைத்துக் கொண்டு நின்றான்.

அமீர் ஜவஹர் நடந்தான். வரிசையாகச் சில கடைகள். அவற்றின் இரும்பு மூடுகதவுகள் இழுக்கப்பட்டிருந்தன. அவற்றில் இரண்டாவது கடையை நெருங்கினான் கதவில், குவிக்கப்பட்ட விரல் முட்டிகளால், மூன்று தரம். இடைவெளி கொடுத்து இரண்டு தரம், இடைவெளி கொடுத்து ஒரு தரம், தட்டினான்.

கதவுதிறந்து அவனை உள்ளே வாங்கி, மூடியது.

அச்சுதன் கருஞ்சிறுத்தை போல் சப்தமின்றி எதிர்ச் சாரியில் நடந்து வந்தான். கடைகளைப் பார்த்தான். அமீர் ஜவஹர் நுழைந்த கடைக்கு மேல் குப்தா ஸ்டூடியோஸ்

அஞ்சனா மைக்கேல் ராஜ்

என்று ஹிந்தியில் படித்தான். முடிவுக்கு வந்தான்.

சரியாக முப்பத்திரண்டாவது நிமிடம், எக்குக்கதவு மேலே தூக்கப்பட்டு அமீர் ஜவஹர் வெளிப்பட்டான். நீளம், நீளமான நடையில் மாருதியை அடைந்து, ஏறினான். கதவைச் சாத்திக் கொண்டு, ஸ்டியரிங்கில் அவன் கைவைத்த போது, அவனது பின்னங் கழுத்தில் உலோகக்குழாய் ஒன்றின் தண்மை பதிந்தது.

''டோன்ட் மூவ். எண்ட கையில் இருக்குன்ன ரிவால்வர் வளர நாளாய் ஜோலியில்லாது இரிக்குகயானு. இதுக்கு ஜோலி கொடுக்க வேண்டா.''

அமீர் ஜவஹர் விறைத்தான்.

''யார் நீ?'' என்று மெல்லிய குரலில் கேட்டான்.

''ஹாண்ட்ஸ் அப்!''

கைகளை உயரத் தூக்கினான். பின்னால் இருப்பவன் யார், அவனை எப்படிசமாளிப்பது என்று அமீர் ஜவஹரின் மூளை குதிரை வேகத்தில் சிந்தித்தது. அவன் சிந்தித்துக் கொண்டிருந்த அதே சமயம் அமீர் ஜவஹரின் உயர்த்திய வலது புஜத்தில் ஒரு சிறிய ஊசி செருகப்பட்டது.

''டோன்ட் ஓர்ரி. இனியும் சொல்ப சமயத்தில் நீ மயங்கி விழும். ஈ நிமிஷம் தொட்டு நிண்ட டிரைவர் ஞானாணு!''

கோவிந்தபுரி.

கர்னல் அருள்தாஸின் மாளிகை.

அந்த மாளிகை பகல் நேரத்தில் பார்க்கப்பட வேண்டிய ஒன்று. சுற்றி வரத் தோட்டமும், பின்னால் இருக்கும் சின்னச் செவ்வக விளையாட்டு மைதானமும், நடுவே கட்டப்பட்ட அழகான வீடும், பறங்கியர் கால வீடுகளை நினைவூட்டினாலும் இன்றைக்கும் ரம்யமான காட்சி. பகலில்

உன்னே வா. வந்து நீ யார் என்பதை முதலில் எங்களுக்குச் சொல். அப்புறம் நாங்கள் சொல்கிறோம் உண்மையிலேயே நீ யார் என்பதை — உனக்கு!

— ராபர்ட் லிட்டல்.

பார்க்க வேண்டிய விஷயம் என்பதால் அதைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம்.

மாளிகையின் உள்ளே ஓர் அறை. திரையிட்ட ஜன்னல் ஒன்றில் தூக்கம் விழித்த அணில் ஒன்று உட்கார்ந்து உள்ளே நடப்பதை வேடிக்கை பார்த்தது.

கர்னல் அருள்தாஸ் சக்கர நாற்காலியை முன்னும் பின்னுமாக அசைத்துக் கொண்டிருந்தார்.

பக்கத்தில் அச்சுதன் வினயத்துடன் கை கட்டி நின்றான்.

அறையின் மையத்தில் அமீர் ஜவஹர் நின்றிருந்தான். மயக்க மருந்தின் ஆதிக்கம் அடியோடு விலகாததால், அவன் போதையில் இருப்பவனைப் போல் லேசாகத் தள்ளாடி நின்றான்.

''யார் நீங்கள்? கொள்ளைக்காரர்களா, தீவிரவாதிகளா? என்னைக் கடத்தியதால் உங்களுக்குப் பைசா பிரயோஜனமில்லை,'' அமீர் ஜவஹர் பேசிய போது, அவன் விழிப்பதற்காக அவன் மீது கொட்டப்பட்ட தண்ணீர் அவன் நெற்றியிலிருந்து உதடுகளுக்கு நீர்க் கோடாக வழிந்தது. அவன் தலைக்கு மேலே தொங்கிய விளக்கொன்று அவனை மட்டும் வெளிச்சம் போட்டுக் காட்டியது. காற்றில் திரை அசைந்து, ஜவஹரின் தலைக்கு மேல் இருந்த விளக்கு அசைந்து, அவன் நிழலை அவன் காலுக்குக் கீழ் ஊஞ்சல் போல் அசைத்தது.

கர்னல் அருள்தாஸ் ஒரு பெருமூச்சு



விட்டார். சக்கர நாற்காலி நின்று விட்டது.

"அமீர் ஜவஹர். நாங்கள் யாரென்று உனக்கு நன்றாகத் தெரியும். இந்நேரம். 'நீ யார்' என்று எங்களுக்கு தெரியும் என்பதும் உனக்குத் தெரியும்."

அமீர் ஜவஹர் இருட்டில் நிழலாகத் தெரிந்த அவர்கள் இருவரையும் பார்த்தான். அந்த இளைஞன் நன்றாக உடுத்தியிருந்தான். தினம்தினம் உடற்பயிற்சி செய்பவன் போல் இருந்தான். சக்கரநாற்காலிக்காரரின் உடற்கட்டும், தலையில் இருந்த சிக்கனமான திருத்தமான முடியும், சக்கரநாற்காலியில் அந்த ஆள் அமர்ந்திருந்த பாங்கும் அவனுக்கு ஒரு விஷயத்தைச் சந்தேகமறத் தெரிவித்தன. அவர்கள் இருவரும் இந்திய ரகசிய சர்வீஸைச் சேர்ந்தவர்கள்.

"எனக்கு ஒன்றுமே புரியவில்லை" என்றான். இந்த இடத்திலிருந்து தப்பித்தாக வேண்டும். எப்படியாவது, எப்படியாவது...



மேனேஜர்: உன்னோட லிமிட்டே நூறு ரூபாதானேய்யா...? இருநூறு ரூபா இலஞ்சம் வாங்கினியாமே...!

கிளார்க்: ஹி... ஹி... பக்கத்து சீட்டு கிளார்க் லீவு... அதான் அவருக்கும் சேர்த்து வாங்கிட்டேன்...!

— சுரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா

"அமீர் ஜவஹர். விளையாட்டு போதும். இப்படியே நேராக ஜெயிலுக்குப் போக ஆசையாக இருந்தால் சொல். அனுப்பி விடுகிறோம். இல்லையா, நாம் கொஞ்சம் பேசிப் பார்ப்போம். மேலே என்ன செய்யலாம் என்பது நீ பேசிய பின்தான் முடிவாக வேண்டும்."

அமீர் ஜவஹர் தனக்குப் பாகிஸ்தானில் கொடுக்கப்பட்ட பயிற்சிகளை நினைத்துக் கொண்டான். அவனுக்கு அளிக்கப்பட்ட பயிற்சிகள் அவனை எந்த வித அபாயமான தருணத்தையும் எதிர்கொள்ளப் பக்குவப் படுத்தியிருந்தன. ஆனால் இந்த மாதிரியான ஒரு தருணத்திற்கு அவனை எந்தப் பயிற்சியும் தயார்ப் படுத்தவில்லை. அவனுக்கு அளிக்கப்பட்ட பயிற்சிகள், அவனுடைய வருஷக்கணக்கான உழைப்பு, போட்ட திட்டங்கள் எல்லாமே வெகு திடீரென ஆவியாகிப் போனமாதிரி உணர்ந்தான்: கால்களில் எலும்புகளுக்குப் பதில் பஞ்சு வைத்துத் தைக்கப்பட்டு விட்ட மாதிரி தளர்ந்தான். எப்படி அவனைக் கண்டு பிடித்தார்கள்?

"ஸார். எங்கேயோ தப்பு நடந்திருக்கிறது என்று நினைக்கிறேன். வேறு யாரையோ அழைத்துக் கொண்டு வருவதற்குப் பதில் உங்கள் நண்பர் என்னை அழைத்துக் கொண்டு வந்துவிட்டார் போலும்" என்றான் அமீர் ஜவஹர் தெளிவான உத்திர பிரதேச ஹிந்தியில்.

"ஜவஹர், ஸாரி. உன்னை இன்றைக்கு ராத்திரி இங்கேயே தங்க வைக்க வேண்டியிருக்கும் என்று நினைக்கிறேன். பாவம் உன் தங்கை. தனியாகப் பயந்து கொண்டிருப்பாள். ஒரு போன் பண்ணிவிடு முதலில்."

"ஸார்... நீங்கள் யாரென்றே எனக்குத் தெரியவில்லை. நீங்கள் தப்பாக...."

"தப்பாக எதுவுமே நடக்கவில்லை ஜவஹர். நான் யார் என்று உனக்குத் தெரியவில்லை, இல்லையா? நான் கர்னல் அருள்தாஸ். இவன் அச்சுதன். என் உதவியாளன். விசுவாசமுள்ள இந்தியன். உன்னைப் போல் இந்தியாவுக்கு வரும் ஒற்றர்களைக் கவனிக்கும் ஸ்பெஷல் ஸ்க்வாடிற்கு நான் ஒரு லீடர்."

"ஒற்றனா? என்ன உளறுகிறீர்கள்?"

"மை டியர் பாய். இந்தியா பரந்த மனம் கொண்ட தேசம். வருபவர்களுக்கெல்லாம் கதவு திறந்து விடும் தேசம். அதற்காக உள்ளே வருபவர்களில் பசு யார், குதிரை யார், முதலை யார், தந்திரமான நரி யார் என்பதைக் கூடக் கவனிக்காத முட்டாள் தேசமில்லை. இரண்டு வருடங்களுக்கு முன்னால் அமெரிக்காவிலிருந்து வந்து இங்கு செட்டிலாகி, நீ வியாபாரம் பண்ண லைசென்ஸிற்கு அப்ளை . பண்ணியவுடனேயே உன் முதுகை நாங்கள் பார்க்க ஆரம்பித்து விட்டோம்....! சந்தேகப்பட்டு விட்டால் ஒருவனுடைய சரித்திரத்தை, அவன் கருவில் உருவானதில் இருந்தே ஆராய்ந்து பார்க்கத் தொடங்கி விடுவோம். உன் சரித்திரம் என்ன என்று சொல்கிறேன். சரியாக இருக்கிறதா என்று பார். அச்சுதன், கொஞ்சம் லெமன் ஜூஸ். ஜவஹருக்கும் கொடு. ரொம்ப களைப்பாகத் தெரிகிறான்."

அமீர் ஜவஹர் என்ன பதில் சொல்வது என்று புரியாமல் நின்றான். அச்சுதன் மௌனமாக நடந்து போய், குளிர்ப் பதனப் பெட்டியைத் திறந்து, மூன்று பாட்டில்களைக் கொண்டு வந்தான். மூடி நீக்கி ஜவஹரிடம் ஒன்றை நீட்டினான். அமீர் ஜவஹருக்கு அது தேவையாக இருந்தது. அப்படியே மடக் மடக்கென்று குளக்கரை தாக நாய் போல் குடிக்கத் தொடங்கினான். எலுமிச்சை ரசம் அவன் மேலெல்லாம் வழிந்தது.

"புவர் பாய்.... புவர் பாய்...." என்று

# தோழர்கள் தருவார்கள் சிறப்பிடம் - உங்களுக்கே !

சாதாரண சோப்புகள் உடல் வாடையை தடுக்காது. அது உங்களுக்கு தெரியும்.

புதிய ஷீல்டின் இன்ட்டர் நேஷனல் டியோடரன்ட் மட்டுமே தீவிரமாக உடல் வாடையை தடுக்கிறது. தன்னம் பிக்கை புத்துணர்வு தருகிறது. . . மணிக்கு மணி!




புதிய

இண்டர்நேஷனல் டியோடரன்ட் உள்ளது.

## தன்னம்பிக்கையின் புத்துணர்ச்சி !

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு



'பம்பாய்' என்ற பெயர் 'மும்பை' என்று மாற்றப்பட்டுள்ளது! 'மும்பை' இங்குள்ள கோலிகள் (நகரத்தின் மூத்த குடியினர்) வழிபட்ட 'மகா அம்பை ஆயி' என்பதன் சுருக்கம்.

— ராஜீவி நரசிம்மன்.

கர்னல் முணுமுணுத்து விட்டு, பாட்டில் வாயின் விளிம்பு துடைத்துக் குடிக்கத் தொடங்கினார். ஒரு விழுங்குடன் நிறுத்தினார். "அமீர், நீ பிறந்தது பங்களா தேஷில். பங்களாதேஷின் முக்திபாகினி ரத்தம் சிந்தியபோது உனக்கு மூன்று வயது. பங்களா தேஷ் யுத்தம். மகத்தான யுத்தம். உனக்கு நினைவிருக்காது. உன் தங்கை சாந்தினிக்குப் பால் குடிக்கும் வயது. உன் தந்தை ஒரு முக்தி பாகினி வீரர். அவரையும் உனக்கு நினைவிருக்கிறதோ இல்லையோ. பங்களா தேஷில் பிறந்த நீ பாகிஸ்தானில் வளர்க்கப்பட்டாய். நீ வளர்ந்த இடம் ஒரு பாகிஸ்தானிய மேஜர் வீடு. மேஜர் நாஸர். நீ வளர வளர உன் மனத்தில் இந்திய வெறுப்பு என்கிற விதை விதைக்கப்பட்டது. புதைக்கப்பட்டது. இந்தியர்கள் நாய்கள் என்ற எண்ணத்துடன்தான் வளர்ந்தாய். நான் சரியாகச் சொல்கிறேனா?"

அச்சுதன் இன்னொரு பாட்டில் நீட்டினான். கர்னல் சொன்னதைக் கவனிக்காதவன் போல அமீர் ஜவஹர் அந்த பாட்டிலையும் ஆர்வத்துடன் வாங்கிக் கொண்டான்.

"இந்தியர்கள் கேடுகெட்டவர்கள் என்று உன் மனத்தில் ஆழமாகப் படிந்தது எதனால் தெரியுமா? உனக்கு மேஜர் நாஸரால் அளிக்கப்பட்ட போதனையால். இந்திய சிப்பாய்கள் உன் அப்பாவைக் கொன்றதாக உன்னிடம் சொல்லப்பட்டது. ரைட்? உன் அம்மாவை நாசம் செய்தவர்களும் இந்திய சிப்பாய்களே என்று சொல்லப்பட்டது, ரைட்? நீயும் உன் தங்கையும் மேஜர் நாஸரால் காப்பாற்றப்பட்டு பாகிஸ்தானுக்கு அழைத்துச் செல்லப்பட்டதாகச் சொல்லப்பட்டது. மறுபடி மறுபடி சொல்லிச் சொல்லி உன் மனத்தில் வெறுப்பை வளர்த்தார்கள். இந்தியாவின் மேல் உனக்கு உடம்பு முழுக்க வெறுப்பு. ஏன் இந்த வெறுப்பு? நீ ஒரு பாகிஸ்தானிய ஒற்றனாக மாறுவதற்கு அவர்கள் சிறுவயதில் இருந்தே உன்னைத் தயாரித்திருக்கிறார்கள். எதனால் உன்னைத் தேர்ந்தெடுத்தார்கள் தெரியுமா? வளையக் கூடியவன் என்பதால். அம்மா அப்பா இல்லாத அனாதை என்பதால். நீ செத்துப் போனால் யாரும் உன்னைப் பற்றிக் கேட்டுக் கொண்டு வரமாட்டார்கள் என்பதால். அவர்களுக்கு நீ ஒரு கருவி. அவர்கள் நினைத்தது நடந்தது. நீ ஒற்றனாக மாற உன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டாய். பாகிஸ்தானில் இருந்து நேரடியாக இந்தியா வந்தால் சந்தேகம் வரும் என்பதால் அமெரிக்கா சென்று அந்த கவர்மெண்ட்டின் உதவியோடு அமெரிக்கப் பிரஜையாகி, இந்தியாவில் பிஸினஸ் செய்பவன் என்னும் போர்வையுடன் இங்கே வந்தவன் நீ. அப்கோர்ஸ் உன் தங்கை சாந்தினியுடன்.... பங்களா தேஷில் பசுவாய்ப் பிறந்தவன், பாகிஸ்தானில் குதிரையாக வளர்ந்தவன், இந்தியாவிற்குப் பசுக்குதிரையாக அனுப்பப்பட்டாய்.... பிஸினஸ் போர்வையில்."

"பாகிஸ்தானில் வளர்ந்தவன் இந்தியாவில் பிஸினஸ் பண்ணக்கூடாது என்றால் முதலிலேயே லைசன்ஸ் கிடையாது என்று சொல்லியிருக்க வேண்டியது தானே? பர்மிஷன் தந்துவிட்டு இப்போது எதற்கு என்னைக் கார்ப்பரேஷன் நாயைப் பிடித்துக் கொண்டுவருகிற மாதிரி பிடித்து வர வேண்டும்?"

"உனக்கு பர்மிஷன் தந்தது நகை பிஸினஸ் செய்ய. இந்திய ரகசியங்களை வைத்து வியாபாரம் பண்ணுவதற்கு இல்லை!"

"இந்திய ரகசியமா? அது எனக்கு எதற்கு?"

"என்று நீ கேட்பாய் என்பதால்தான் அச்சுதன் உன்னைக் கையும் களவுமாகப் பிடித்திருக்கிறான்.

"பொய். என் காரில் திருட்டுத்தனமாக ஏறி என்னிடம் ஒரு கவரைத் திணித்துவிட்டு என்னை நீங்கள் பிடித்து வைத்திருக்கிறீர்கள்."

"உனக்கு உறுதியான பயிற்சிகள் கொடுத்திருப்பார்கள். சுலபத்தில் உடையமாட்டாய். உன்னை என்னால் உடைக்க முடியும்! அச்சுதன்!"

**ம**றுநாள் சூரியன் நீல ஆகாயத்தில் வெளிச்சப் பொத்தல் போட்டிருந்தது. ஜன்னல் கம்பிகளின் நீள நிழல்கள் அமீர் ஜவஹரின் மீது படுத்திருந்தன. அவன் வெகுவாகக் களைத்திருந்தான். தளர்ந்திருந்தான். மார்பில் தலை கவிழ்ந்திருந்தது.

கர்னல் அருள்தாஸ் அவன் மோவாயை ஒரு வலுவான பிரப்பங்குச்சியால் நிமிர்த்தினார்.

அயற்சி சேர்ந்த பார்வையால் அருள்தாஸை அவன் அளவிட்டான்.

"என்ன முடிவு செய்தாய்?" என்று கேட்டார் அருள்தாஸ் நம்பிக்கையோடு.

(தொடரும்)

# புதிய கல்வெட்டுக்கள்

## ஸ்டெல்லா புரூஸ்

**ப**தினைஞ்சு நாட்களுக்கு முன்னால் என்னுடைய பாட்டி பத்மா இறந்து விட்டாள். செத்துப் போவதற்கு நான்கு நாட்களுக்கு முன்னால் பாட்டி ஒருத்தருக்கும் தெரியாமல் என்னிடம் மட்டும சொன்ன சங்கதியைக் கேட்டதும் அதிர்ச்சியாகவும் தாங்க முடியாத ஆச்சர்யமாகவும் போய் விட்டது எனக்கு. அதுவரைக்கும் என்னுடைய தாத்தா திருமலைதான் சில சமாசாரங்களில் ஒரு மாதிரியான ஆசாமி என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஏனென்றால் என் தாத்தா அப்படியொரு விநோதமான மனிதர். உதாரணத்திற்கு ஒரே ஒரு விஷயத்தை மட்டும் சொல்லிக் கொள்கிறேனே...

— ஒரு சமயம் என்னுடைய அத்தை ஒருத்திக்கு மோசமான டிப்தீரியா வந்து விட்டது. திடீர்னு ஒரு நாள் அத்தையோட நிலைமை கவலைக்கிடமாகவும் ஆகி விட்டது. டாக்டர் வெங்கடாச்சாரிதான் வைத்தியம் பார்த்து வந்தார். "பன்னிரண்டு மணி நேரம் தாங்கறதே கஷ்டம்; நீங்க எல்லாருக்கும் தகவல் கொடுத்துடலாம்" என்று சொல்லி ஒரு நாள் வெங்கடாச்சாரி ரெண்டு கையையும் விரித்து விட்டார். உடனே என் தாத்தா கடிகாரத்தில் ஒரு கண்ணும்; என் அத்தையின் மேல் ஒரு கண்ணுமாய் — நடுக்கூடத்தில் நாற்காலியை எடுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்து விட்டார். பன்னிரண்டு மணி நேரக் கணக்கைக் கண்காணித்துக் கொண்டிருக்கணுமே...

அத்தையின் உயிர் இதோ போய் விடும்; இதோ போய் விடும் என்று தாத்தாவும் உட்கார்ந்து உட்கார்ந்து பார்த்தார். உயிர் போவதற்கான வழியையே காணோம். திடீர்னு ஓடிக் கொண்டிருந்த அந்தக் கடிகாரம்தான் நின்று தொலைந்து விட்டது...! தாத்தாவிற்கு அப்படியொரு ஆதங்கம். அத்தை சாகாமல் பிழைத்துக் கொண்டதைப் பற்றிக் கொஞ்சம் கூட சந்தோஷமே படவில்லை மனிதர்... பெரிய டாக்டரின் வாக்கு பொய்யாகக் கூடாது அவருக்கு... இப்படிப்பட்டவரை விநோதமான ஆசாமி என்று சொல்லாமல் வேறு எப்படிச் சொல்வது?!

ஆனால் இந்த மனுஷரையெல்லாம் தூக்கிச் சாப்பிட்டு விட்டாள் என் பாட்டி.

**ப**ள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்த நீண்ட நாட்களில் எனக்குப் புரியாமலேயே இருந்த ஒரு விஷயம் — என் ஒருத்தனுக்கு மட்டும் இரண்டு பாட்டிகள் இருந்தது தான்... என்னோடு படிச்ச பையன்கள் எல்லோருக்குமே — ஒரு தாத்தா ஒரு பாட்டி. எனக்கு மட்டும்தான் ஒரு தாத்தா, இரண்டு பாட்டி...! இரண்டு பாட்டிகள் என்பதில் எனக்கு நெஞ்சு கொள்ளாத பெருமை. கூடப் படிக்கிற பையன்களிடமெல்லாம் போய் ரொம்பத்தான் பீற்றிக் கொள்வேன். பையன்களும் சரியான மக்குகள்தான். இல்லாவிட்டால் விவரம் புரியாமல் அதற்கெல்லாமா என் மேல் போய்ப் பொறாமைப்படுவார்கள்?!

**ஆ**னால் வேறொரு வயசு வந்த அப்புறம் தாத்தாவின் இந்த இரண்டு பாட்டி சமாசாரம் எல்லாம் வெட்ட வெளிச்சமாகத் தெரிந்து போய் விட்டது எனக்கு. இன்றைக்குத்தான் பெரிய வீடு, சின்ன வீடுயென்று எப்படியெல்லாமோ பேசுகிறார்கள். ஆனால் என் திருமலைத் தாத்தாவின் விஷயத்தில் அந்த மாதிரியான சமாசாரம் எதுவும் கிடையாது. என்னோட இரண்டு பாட்டிகளுமே தாத்தாவிற்குப் பெரிய வீடுகள்தான்...! என் பத்மா பாட்டி வீடும் பெரிசு. சந்திரவதிப் பாட்டி — அதாவது சின்னப் பாட்டி வீடும் அதே மாதிரி பெரிசுதான்... இதில் இருக்கிற இன்னொரு பெரிய சுவாரஸ்யம் என்னவென்றால் — எங்களின் இரண்டு பாட்டிகளும் நிஜமாகவும் அக்கா, தங்கச்சிகள்தான். அதுவும் கூடப் பிறந்த அக்கா தங்கச்சிகள்...!

என் பாட்டி — அதாவது என் அப்பாவைப் பெற்றவள் — பத்மாதான் அக்கா. சந்திரவதிப் பாட்டி தங்கச்சி. அக்காவுக்கும் தங்கச்சிக்கும் சரியாகப் பத்து வயசு வித்தியாசம். தாத்தா முதலில் எங்கள் பத்மா பாட்டியைக் கல்யாணம் செய்து கொண்ட போது பாட்டிக்கு வயசு பதினாலே பதினாலுதான். தாத்தாவுக்கு அப்போது பதினெட்டு வயசு. அவர்கள் இரண்டு பேருக்கும் கல்யாணமாகி அப்படி இப்படியென்று பன்னிரண்டு வருஷம் வேகமாய் ஓடியும் விட்டது. இந்தப் பன்னிரண்டு வருடத்தில் பாட்டிக்குப் பிறந்த பிள்ளைகள் ஏழில் இரண்டு செத்துப் போய் விட, ஐந்து பிள்ளைகள் இருந்தார்கள். இந்த ஐந்தில் மூன்று ஆண், இரண்டு பெண். இந்தச்



## அருள்வாக்கு

வியாதியஸ்தன் மருந்து சாப்பிட வேண்டுமா, வேண்டாமா என்பதற்கு விவாதம் பெரிசாகப் பண்ண வேண்டுமா? மருந்தைக் கொடுத்துப் பார்த்தால் என்ன நடக்கிறது, கொடுக்கா விட்டால் என்ன நடக்கிறது என்று பார்த்தால் போதாதா? மருந்து கொடுக்கிறமட்டில் வியாதி குறைகிறது, விட்டு விட்டால் ஜாஸ்தியாகிறது என்று பிரத்யக்ஷத்தில் தெரிகிறது. அப்போது மருந்து வேண்டத்தான் வேண்டும் என்றுதானே அர்த்தம்? பூர்வாசாரங்கள் இருந்தவரையில் தேசத்தில் எல்லாத் துறையிலும் அபிவிருத்தி இருந்தது. இதற்கு மேலாக ஒழுக்கமும் ஒற்றுமையும் இருந்தன. அவற்றை ஒழிக்க ஆரம்பித்ததிலிருந்து இவற்றையெல்லாமும் விரட்டியாகிறது என்பதிலிருந்தே அந்த மருந்து இல்லாவிட்டால் ஆத்மாவுக்கு வியாதிதான் என்று தெரியத்தானே வேண்டும்? ஒருவேளைச் சாப்பாட்டை நிறுத்தினால், உடனே ஒய்ச்சலாக வந்

"ஆமாம்ப்பா கபாலி... எல்லாம் தெரிஞ்சுதான் உங்கிட்ட வந்தேன். உண்மையிலே வடிவேலுக்கு உதவி செய்யறதுதான் என் நோக்கம். உன் வாயாலே அவனைப் பத்தி ரெண்டு நல்ல வார்த்தை வந்துட்டா, அவனுக்கு ஹெல்ப் பண்ண எனக்கும் தெம்பா இருக்கும்."

"என்ன உதவி செய்யப் போறீங்க?"

"சொந்தமா ஒரு மெகானிக் ஷாப் வைச்சுக் கொடுக்க ஏற்பாடு செய்யலாம்னு உத்தேசம்."

"நிறையப் பணம் தேவைப்படும் சார்."

"பணம் நிறைய இருக்கு. நீ விரும்பினா, நீயும் அவனோட கூட்டாளியா இருக்கலாம்."

"சொல்லுங்க சார்! நான் ரெடி.. அதுக்கு நான் என்ன செய்யணும்?"

"இப்போதைக்கு நாம பேசினது பத்தி நீ வடிவேலுகிட்டப் பேசக் கூடாது."

"நீங்க இங்க வந்ததையே சொல்ல மாட்டேன் சார்."

"இன்னொண்ணு. மறுபடியும் உன் உதவி எனக்குத் தேவைப்படும். அப்ப உங்கிட்ட வருவேன்!"

"சொல்லி அனுப்புங்க சார். நானே வரேன்."

"ரொம்பத் தாங்க்ஸ், கபாலி.

வீடு திரும்பும் வழியில் திடீரென்று டாக்டர் திருமலையின் நினைவு வந்தது. அவர் குடும்ப டாக்டர். ரங்கனைப் பரிசோதனை செய்ய அன்று வந்திருக்கிறார். ரங்கனுக்கு என்ன உடம்பு? மாலை ஆறரை மணிக்குச் சென்று பார்த்த போது தூக்கத்தில் உறைந்து போயிருந்தான். ஆனால் சுவாசக் குழாயிலிருந்து பீறிட்டு வந்த காற்று, அபஸ்வர ஓசையுடன் காதைத் தாக்கியது. ஆஸ்த்துமா வியாதி அவ்வப்போது தலைகாட்டும் என்று ரமணிக்குத் தெரியும். ஆஸ்த்துமாவா? ஜுரமும் இருக்கிறது என்று அம்மா சொன்னாளே?

டாக்டர் திருமலை, தம் கடையை மூடும் போது பத்து ஏன் பத்தரை கூட ஆகி விடும். தம் வீட்டிலேயே முன் பக்கத்து அறையில் தொழில் நடத்துவதால் அவர் நேரம் காலம் பார்ப்பது கிடையாது.

ரமணி பிரவேசித்த போது மேஜை மீது இரு கால்களையும் போட்டவராய் டாக்டர். திருமலை உட்கார்ந்திருந்தார்.

"வாப்பா ரமணி... யார் அது. ஒரு புல் தடுக்கி வஸ்தாது? உன் வீட்டு மாடியிலே குடிவைச்சிருக்கே?"

"நாலு வருஷம் முன்னாலே நீங்கதான் அவனைப் பார்த்திருக்கீங்களே டாக்டர்? ரங்கன். தாத்தாவுக்கு ஒத்தாசையா கொஞ்ச நாள் இருந்தானே?"

"ஓ. அவனா? மறுபடியும் ஒத்தாசை செய்ய வந்துட்டானா? இந்த மாதிரிக் கேஸ்களையெல்லாம் வீட்ல வைச்சுக்காதே, ரமணி."

"ஏன் சார்... என்ன அவனுக்கு?"

"சுவாசக் குழாயை டெஸ்ட் பண்ணினேன். புழுதி அடைஞ்சரும் மாதிரி இருக்கு. ஏதோ ஒரு அப்ஸ்ட்ரக்ஷன்.. தடங்கல்."

"அவன் தனக்கு ஆஸ்த்துமா உண்டுன்னு சொல்லியிருக்கான்.

டாக்டர் சிரித்தார்.

"மூச்சுத் திணறலை வைச்சுட்டு எவனோ நாட்டு வைத்தியன் சொல்லியிருக்கான்... தற்காலிகமா ஜுரத்துக்கு மருந்தும், சிரமமில்லாம மூச்சு விட ஒரு இன்ஜெக்ஷனும் டாப்ளெட்டும் கொடுத்திருக்கேன்."

"அசந்து தூங்கறான் டாக்டர்."

"ஸ்பெனர்கான் இன்னா தூக்கம் வரும். நான் கொடுத்திருக்கேனே."

"அவனை நீங்க ரொம்பத் தீவிரமா ட்ரீட் பண்ணணும், டாகடர். ஸ்பெஷல் ரிக்வெஸ்ட்."

"நீ சொன்னா செஞ்சுட வேண்டியதுதான். ஆனா செலவு நிறைய ஆகுமே?"

"என்ன ஆனாலும் பரவாயில்லே!"

"அவனாலே கொடுக்க முடியுமா, ரமணி?"

"அவன் லட்சாதிபதி சார்!"

"யார் இவனா? பார்த்தாத் தெரியலையே..."

"பணக்காரக் களை வர்றத்துக்கு இன்னும் கொஞ்ச நாள் ஆகும் டாக்டர்!"

"நீ என்ன சொல்றே, ரமணி?"

ரமணி விஷயத்தைச் சொன்னான்.

டாக்டர் அயர்ந்து போய் ரமணியைப்

தால் சாப்பிட வேண்டும் என்று தெரிகிறதோ இல்லியோ? சாஸ்திரத்தை விட்ட பின் தனி வாழ்க்கை, ஸமுதாய வாழ்க்கை இரண்டிலும் நிம்மதி போன பிற்பாடும் பூர்வாசாரம்-வேண்டும் என்று தெரிந்து கொள்ள மாட்டோமென்றால் என்ன பண்ணுவது?

பதிதபாவனன் என்று பகவானைச் சொல்கிறோம். "பதிதபாவன ஸீதாராம்" என்பதாவது காந்தியால் நின்றிருக்கிறது. (தேசத்தில் நிலவுகிறது) அந்த ராமன் ஸகல கார்யமும் சாஸ்திரத்தைப் பார்த்துப் பார்த்தேதான் செய்தான். அந்த வழியிலிருந்து நாம் அடியோடு வழுக்கி விழுந்து பதிதர்களான பின் அவன் நம்மை பாவனப்படுத்துவது என்றில்லாமல், அவனை நாம் அவ்வளவு வேலை வாங்காமல், இப்போதிலிருந்தே நம்மை முன்னோர்களின் நெறியில் அவன் தூக்கி விட்டு ரக்ஷிக்கும்படியாகப் பிரார்த்தனை செய்வோம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

பார்த்தார்.

"நான் வரேன் டாக்டர். நாளைக்கும் வந்து பாருங்கோ ரங்கனை!"

"அவசியம் பார்க்கிறேன்.

"ஜுரம் தணிஞ்சப்புறம் அவன் உடம்பை ஸ்கான் பண்ணிப் பார்க்கலாம். முக்கியமா விண்ட் பைப். லங்ஸையும் டெஸ்ட் பண்ணணும்."

"எனக்கு அதெல்லாம் தெரியாது. டாக்டர். இன்னும் ஏழெட்டு நாள்ளே அவன் பழைய ரங்கனா நடமாடணும்!"

"நடமாடுவான். அப்புறம் மறுபடியும் திடீர்னு இந்த மாதிரிப் படுத்துப்பான். பூரணமா குணப்படுத்தறது கொஞ்சம் சிரமம். பார்க்கிறேன். ஸ்பெஷலிஸ்ட்டையும் கன்சல்ட் பண்ணுவோம்!"

"உசிருக்கு?"

"இப்போதைக்கு ஒண்ணும் பயமில்லே, ரமணி!"

"எப்படி, இது திடீர்னு வந்தது. டாக்டர்! புரியல்லே!"

"எல்லாமே திடீர்னுதாம்ப்பா வரும். உள்ளே ஒளிஞ்சுக்கிட்டிருக்கிறது. ஒரு நாள் திடீர்னுதான் வரும்!"

குழம்பிய மனத்துடன் வெளியேறிய ரமணி தனக்குள் பிரார்த்தித்துக் கொண்டான்.

"கடவுளே, ரங்கன் நீண்ட நாள் வாழ நீதான் கிருபை செய்யணும்."

**ம**றுநாள், ஞாயிற்றுக் கிழமை காலை பத்து மணிக்கு வடிவேலு மொபட்டில் வந்து இறங்கினான். ரமணி அவனை மாடிக்கு அழைக்க, பதில் பேசாமல் பின்தொடர்ந்தான்.

ரங்கன் இருக்கும் அறை சாத்தப்பட்டிருந்தது. ரமணி லேசாகத் திறந்தான். ரங்கன் இன்னும் தூங்கிக் கொண்டிருந்தான். அவனுடைய மூச்சின் சிரமமும் இரைச்சலும் வடிவேலுவைத் திகைக்க வைத்தன.

ரமணி மீண்டும் கதவைச் சாத்தி விட்டு மௌனமாய் மொட்டை மாடியை அடைந்தான். பெரிய தண்ணீர்த் தொட்டிக்குக் கீழே நிழல் இருந்ததால், அங்கே ரமணி நிற்க, கூடவே வடிவேலுவும் நின்றான்.

"யார் சார் அந்த ஆள்?"

"நான் சொன்னேனே, ஒருவனுடைய வாழ்வை நீ காப்பாற்ற வேண்டும்னு. அவன் தான் இவன்!"

"புரியலே சார். இவனுக்கு நான் என்ன உதவி எப்படிச் செய்ய முடியும் சார்? ரத்த தானம் செய்யணும்னு சொல்றீங்களா?"

"இல்லே... வாழ்வு தானம். அவனுக்கு நீ சுதந்திரம் வாங்கிக் கொடுக்க வேண்டும்!"

"நீங்க சொல்றது ஒண்ணுமே எனக்குப் புரியலே, மிஸ்டர் ரமணி!"

"இவனை எனக்கு நாலஞ்சு வருஷமாத் தெரியும், வடிவேலு. பரமசாது. புத்தி சாதுரியமோ சாமர்த்தியமோ போதாது. என்னைத் தவிர ஆதரவு அளிக்க இவனுக்கு யாரும் இல்லே. நானும் சிநேகிதத்தோட அடிப்படையில் இதுநாள் வரை இவனுக்கு என்னால் முடிஞ்ச உதவிகளையெல்லாம் செய்ஞ்சு வந்தேன். எந்த விஷயத்திலும் என் பேச்சைத் தட்டாத இவன், ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் என் புத்திமதியை லட்சியம் செய்யாம ஒரு காரியம் செய்தான். அதனோட பலனை இப்ப அனுபவிக்கிறான்!"

"அதான் வியாதியிலே படுத்திட்டிருக்கிறானா சார்!" வடிவேலு யதார்த்தமாகக் கேட்டான்.

"இது அவன் உடம்பிலே பிறந்திருக்கிற வியாதி! ஆனா மனசிலே ஒரு ரணம் இருக்கு. அது அவனாக, என் சொல்லைக் கேளாமத் தேடி வாங்கிக்கிட்ட ரணம்! அதை ஒருத்தனால்தான் அப்புறப்படுத்த முடியும்! அந்த ஒருத்தன் நீதான், வடிவேலு!"

"மிஸ்டர் ரமணி சார்! நீங்க இவனைப் பத்தி என்னவெல்லாமோ சொல்றீங்க. வாழ்வு தானம்ங்கறீங்க. தேடி வாங்கிக்கிட்ட ரணம்னு சொல்றீங்க! நான்தான் ரணத்தைக் குணப்படுத்த முடியும்ங்கறீங்க! எனக்கும் இவனுக்கும் என்ன சம்பந்தம்னு இன்னும் ஒரு வார்த்தை கூடச் சொல்லலே!"

"சொல்றேன்" என்ற ரமணி, வடிவேலுவின் கண்களைக் கூர்ந்து பார்த்தான்.

"நீங்க ரெண்டு பேரும் ஒரே பெண்ணுக்குத் தாலி கட்டியிருக்கீங்க!"

வடிவேலு ஆடிப் போனான்!

(தொடரும்)

# இசைக் கோயிலுக்கு இமாலயத் திருப்பணி!



● சண்முகானந்தா சபா



● சுப்பிரமணியன்

**"இசைக்காக, இசையால் வளரும் இசைக் கோயில்" — என்று சண்முகானந்தா அரங்கைப் பற்றி முன்பு குறிப்பிட்டிருக்கிறார் ராஜாஜி. இதன் புனருத்தாரணப் பணிகள் மும்முரமாக நடந்து வருகின்றன......**

எலியும் பூனையுமான இரண்டு அரசியல் கட்சிகளுக்கிடையே ஓர் ஒற்றுமை— இரண்டுமே தங்கள் கட்சிக் கூட்டங்களைப் பம்பாய் சண்முகானந்தா அரங்கில் நடத்தத்தான் விரும்பின! இ. காங்கிரஸ், பி.ஜே.பி. தவிர, "வேறு பல அரசியல் கட்சிக் கூட்டங்களும் சண்முகானந்தாவில் நடந்திருக்கின்றன" என்று கூறுகிறார் சபாத் தலைவர் வி. சுப்ரமணியன்.

இயல், இசை, நாடகத்தோடு மட்டுமே நாம் சம்பந்தப்படுத்தி வந்த சண்முகானந்தா சபா அரங்கில் தொழிலாளர் யூனியன் கூட்டங்கள், பள்ளி, கல்லூரி ஆண்டு விழாக்கள், மதச் சார்பான மாநாடுகள் என்று பலவும் நடைபெற்றுள்ளன.

இ. காங்கிரஸ் இந்த அரங்கின் சீரமைப்புப் பணிக்கு நிதியுதவி செய்ய முன்வந்துள்ளதாம். வட பம்பாய்த் தொகுதி எம்.பி. முரளி தியோரா தமது சொந்தத் தொகையாகப் பத்தாயிரம் ரூபாய் கொடுத்திருக்கிறார்.

சபாவின் ஆறாயிரம் அங்கத்தினர்களிடமும் நன்கொடைக்கு விண்ணப்பித்துள்ளார்கள். மாநில முதல்வர் ஷரத் பவார் தலைமையில், சி. சுப்ரமண்யத்தைப் புரவலராக (patron)க் கொண்டு புனருத்தாரணக் கமிட்டி ஒன்று அமைக்கப்படவிருக்கிறது.

"பாண்டிச்சேரி அரசு ஐயாயிரம் ரூபாய் நன்கொடை அளித்துள்ளது. தமிழக முதல்வரை ஜூன் 17 அன்று சந்தித்துப் பேச நேரம் குறிக்கப்பட்டிருந்தது. அவர் திடீரென்று தில்லி போக நேர்ந்ததால் அந்த அப்பாயின்ட்மெண்ட் கூடி வரவில்லை" என்றார் சுப்பிரமணியன். தமிழகத்தைச் சேர்ந்த கலைத்துறை, தொழில்துறைப் பிரமுகர்கள் பலர் உதவுவதாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்... திருமதி எம். எஸ்.— திரு. சதாசிவம், லால்குடி ஜெயராமன், கே.எஸ். நாராயணன், ஏ. வி. முத்தையா, ஹிந்து ரங்கராஜன் போன்றோர் இவர்களுள் சிலர்...

"சென்னையில் அக்டோபர் — நவம்பர் மாதங்களில் மியூசிக் அகாடமி அரங்கில் பிரபல கலைஞர்களின் நிகழ்ச்சிகளை நடத்தச் செய்து பணம் சேர்க்க முயன்று வருகிறோம். இளையராஜா, லால்குடி ஜெயராமன் போன்றோருடைய நிகழ்ச்சிகள் இருக்கும். டி. டி. வாசு அரங்கை வாடகையின்றித் தந்துதவ ஒப்புக் கொண்டிருக்கிறார்."

இன்ஷூரன்ஸ் பணமாகவும் நன்கொடையாகவும் இவர்கள் தற்போது எதிர்பார்க்கும் தொகை. சுமார் 1.25 கோடி ரூபாய். புனர் நிர்மாணம், நவீன குளிர்ச் சாதன, லைட்டிங் வசதிகள், தீயணைப்பு, விபத்துக் காப்பு ஏற்பாடுகள் எல்லாம் சேர்ந்து செலவாகக் கூடிய தொகையோ ரூபாய் எட்டு கோடி!

சுப்ரமணியத்தின் பொறுப்புமலைப்பூட்டுவதுதான்!

— கிருஷ்ணமூர்த்தி

# அறுபது லட்சம் மக்களை ஆட்டி வைக்கும் நோய்!



பாதிக்கப்பட்ட குழந்தை

ஆஸ்பத்திரி முழுவதும் காதோடு காதாய்ப் பேசிற்று! எல்லோருமே என்னைப் பரிதாபமாகப் பார்த்தார்கள். என் வார்டுக்குள் நுழைகின்ற எல்லா டாக்டர்களும் என்னைத் தொட்டு ஏதாவது பேசிவிட்டுத்தான் போனார்கள். இத்தனை பேர் வியந்து பார்க்கின்ற 'பெரிய' நோயா நமக்கு? என்ற சங்கடம் ஏற்பட்டது.

இதய நோய் என்றார்கள். ஒன்பது வாரங்கள் ஆஸ்பத்திரி வாசம். திடீரென்று மின்னல் மாதிரி நெஞ்சை ஊடுருவும் சிறு வலி ஒன்று தோன்றி மறையும்! அந்தக் கொடூரமான ஒன்பது வாரங்களில் ஒரு நாள் திடீரென்று மூச்சுத் திணறல் ஏற்பட்டது. என் உடல் இயக்கங்கள் மாறி, சீரியஸ் கண்டிஷனுக்கு வந்துவிட்டேன். டாக்டர்களின் முயற்சியால் எப்படியோ தப்பித்தேன். ஆஸ்பத்திரியில் சிகிச்சை முடிந்து வீட்டுக்குப் போனேன். அம்மா என்னைப் பார்த்ததும் கட்டிக் கொண்டு அழுது விட்டாள். அதுவரை திடமாய் இருந்த நான் குபீரென்று வாய்விட்டு அழுதுவிட்டேன். இருபத்து மூன்று வயது ஆள் அம்மாவின் மடியில் படுத்துக் கொண்டு அழுவதைப் பார்த்து அந்தத் தெருவே உறைந்து போயிற்று.

எனக்கு இது எப்படி நேர்ந்தது? இருதயத்தின் வால்வு சேதமாகி விட்டது என்று கூறுகின்ற நோய்! எந்த நேரத்திலும், எனக்கு நெஞ்சு வலியோ, இருதய வலியோ ஏற்பட்டதே கிடையாது. ஆனால் எனக்குப் பதினான்கு வயது இருக்கும் போது அடிக்கடி மூட்டு வலியும் தொண்டை வலியும் ஏற்படும். உடனே அப்பா என்னை நாட்டு மருத்துவரிடம் அழைத்துக் கொண்டு போவார். அந்த மருத்துவத்தில் நோய் சரியாகி விட்டாலும் அடுத்து சில நாட்கள் கழித்து இந்த உபத்திரவம் மீண்டும் தோன்றும். இது ஒன்றும் பெரிய விஷயமில்லை என்று விட்டுவிட அது இருதயம் வரை வேர் விட்டு ஆளை ஆட்டிற்று!

எல்லோரும் போலவே என் பெற்றோர்களும் எனக்குத் திருமணம் செய்து வைக்கப் பிரியப்பட்டார்கள். நான் மறுத்து விட்டேன். ஆனால் எனக்கென்றே சிறுபிள்ளையிலிருந்து பேசப்பட்டு வந்த என் அத்தை மகள்,

"நீங்க நன்றாகத்தானே இருக்கீங்க! அந்த மகமாயி புண்ணியத்தில் உங்களுக்கு ஒன்றும் ஆகாது! கடவுள் மீது பாரத்தைப் போட்டு நாம கல்யாணம் செய்துக்கலாம்..." என்றாள்.

அவள் கண்களில் நீர் தளும்ப உணர்ச்சிகரமாய்ப் பேச, எனக்கே சங்கடமாயிற்று! நிறைய யோசித்து விட்டுச் சம்மதித்தேன். எதற்கும் வைத்தியரிடம் ஒரு வார்த்தை கேட்டுவிடலாமா? என்று தோன்றிற்று! ஒருவேளை மறுத்துவிட்டால்...? பின்பு அழைப்பிதழுடன் வைத்தியரைச் சந்திப்பது என்று தீர்மானித்தோம். அவர் எங்களை வாழ்த்தினார்.

மீண்டும் மெல்லத் தொந்தரவு கொடுக்கத் துவங்கியது! சென்னைக்குப் போனால் சிகிச்சை செய்து கொள்ள வசதியாக இருக்கும் என்று சொன்னார்கள். — எனக்கோ திருச்சியில் வேலை. என் மனைவியும் திருச்சிக்குப் பக்கத்தில் ஒரு பள்ளிக்கூடத்தில் பணியாற்றிக் கொண்டிருந்தாள். என் அண்ணன், 'என் தம்பி ஒரு இருதய நோயாளி சார்! மெட்ராஸ்னா மருத்துவம் செய்ய வசதியா இருக்கும்' என்று ஒவ்வோர் அதிகாரியாகக் கெஞ்சிக் கூத்தாடி மாற்றல் பெற்றுத் தந்தார். ஆனால் என் மனைவிக்கு மாற்றல் கிடைக்கவில்லை. என்னை விட்டுப் பிரிய மனசு இல்லாமல் லாங் — லீவு போட்டுவிட்டு என்னுடனேயே வந்துவிட்டாள்.

சென்னை மருத்துவர்கள் எனக்கு இருதயத்தில் ஒரு 'மைனர்' ஆபரேஷன் செய்ய வேண்டும் என்றார்கள். வறுமையான என் குடும்பச் சூழ்நிலையில் என்னால் அந்த ஆபரேஷனைச் செய்து கொள்ள முடியவில்லை. இப்போது அது முற்றி என் இருதயத்தின்

இரண்டு வால்வுகளும் பழுதாகி விட்டன!

இப்போது ஆபரேஷன் செய்து கொண்டால் தேவலை என்று நினைக்கிறேன். ஆனால் ஒரு லட்சத்திற்கு மேல் செலவாகும் என்கிறார்கள்! என்னால் இவ்வளவு தாங்க முடியாது! மூன்று பிள்ளைகள் படிக்கிறார்கள். மாத்திரைகள் மூலமும், உணவுக் கட்டுப்பாடு மூலமும் என் நோயினைச் சமாளித்துக் கொண்டு வருகின்றேன். மொத்தத்தில் இது ஒரு போராட்டம். எத்தனை நாட்கள் நீடிக்குமோ? ஆண்டவனுக்கே வெளிச்சம்.

— ஒன்று மட்டும் உறுதியாகச் சொல்வேன். ஆரம்பத்திலே தேவையான முறையில் சிகிச்சை எடுத்திருந்தால் எந்தச் சிக்கலும் இல்லை. செலவும் இல்லை. இப்போது நிறையக் குழந்தைகளுக்கு மூட்டுவலி, காய்ச்சல், தொண்டைவலி வருவதாக அறிகின்றேன். அது பிற்பாடு இருதயத்தைப் பாதிக்கலாம்; Rheumatic Heart Ailment ஆக வளரக்கூடும். உடனே சிகிச்சை அளித்து அவர்கள் நலமாக வாழ வழி செய்ய வேண்டும். இதுதான் பெற்றோருக்கு என் கோரிக்கை.

— * ராமஸ்வாமி விவரித்த தமது வாழ்க்கை அனுபவத்தின் சோகம் நெஞ்சை அழுத்த, இதய நோய் நிபுணர் டாக்டர் ஸாலமன் விக்டரிடம் சென்றோம்.

* பெயர் மாற்றப்பட்டுள்ளது



* டாக்டர் ஸாலமன் விக்டர்

"ராமஸ்வாமியைத் தாக்கியுள்ளது முடக்குவாத இதய நோய் (Rheumatic Heart Ailment). மிகக் கொடூரமானது. மன உறுதியில் ராமஸ்வாமி ஆயிரத்தில் ஒருவர். ஆனால் இந்த நோயைப் பொறுத்தவரை அவர் ஆறு மில்லியனில் ஒருவர்! ஆமாம்! இந்தியாவில் அறுபது லட்சம் பேருக்கு இன்று இந்த நோய் இருக்கிறது. வளர்ந்து விட்ட மேற்கத்திய நாடுகளிலெல்லாம் இதனை ஒழித்துக் கட்டி விட்டார்கள். ஆனால் நமது நாட்டில் மட்டும் கொடி கட்டிப் பறக்கிறது!'' என்றார் டாக்டர் விக்டர்.

''இந்த நோயை நாம் ஒழிக்க வேண்டுமானால் நாம் இதைப் பற்றிய முழு விவரங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும்'' என்று கூறி விட்டுத் தொடர்ந்தார்:

''Streptococcus என்றொரு வகை நுண்ணுயிர்க் கிருமி இருக்கிறது. இக் கிருமியின் தாக்குதலால் நமக்குத் தொண்டை புண்ணாகி, ரணமும் வலியும் ஏற்படும். அந்தச் சமயத்தில் நமது உடலின் இயல்பான நோய் எதிர்ப்புச் சக்திகள் சுறுசுறுப்படைந்து Streptococcus கிருமியை எதிர்க்க antibodies உற்பத்தி செய்யும். அடிக்கடி streptococcus தாக்கி, தொண்டை புண்ணானால், antibodies உற்பத்தியும் அதற்கேற்ப அதிகரிக்கும். துரதிர்ஷ்டவசமாக, இதயத்தின் வால்வுகளைப் பழுதாக்கிப் பலவீனப்படுத்தும் சக்தியும் இதே antibodies க்கு இருக்கிறது! எனவே, streptococcus கிருமியின் தாக்குதல் அடிக்கடி ஏற்பட்டால், இதயம் பாதிக்கப்படும் வாய்ப்பு நிறையவே இருக்கிறது.

''ஆகையால் அடிக்கடி தொண்டைப் புண் ஏற்பட்டால் அலட்சியப்படுத்தாமல் மருத்துவரிடம் சென்று சரியான சிகிச்சை எடுத்துக் கொள்ள வேண்டும். தொண்டைப் புண்ணோடு கை கால் மூட்டுகளில் வலி, ஜுரம் ஏற்படுவதும் மூட்டுவாத இதய நோயின் ஆரம்பக் கால அறிகுறிகளுள் ஒன்று. இதயம் பாதிக்கப்படுவதற்கு முன்னால் கை கால் மூட்டுகள்தான் பாதிக்கப்படும். இந்த ஆரம்ப நிலையிலேயே நோயைக் கண்டுபிடித்து விட்டால் தீவிர சிகிச்சை அளித்துக் குணப்படுத்தி விடலாம். ஆனால், பெரும்பாலான மக்கள் இந்தக் கட்டத்தில் அலட்சியமாக இருந்து விடுகிறார்கள். இது சாதாரண ஜுரம் என்று நினைத்துக் கொள்கிறார்கள்.

''இதனால் மிக விபரீதமான பின் விளைவுகள் ஏற்படுகின்றன. நோய் படிப்படியாக முற்றி, இதயத்தில் உள்ள Mitral valve, Aortic valve ஆகிய இரண்டு வால்வுகளையும் பழுதாக்கி விடுகிறது. நோயாளியின் உயிருக்கே ஆபத்து ஏற்படுகிறது. இந்த நிலையில் அறுவைச் சிகிச்சை செய்வதைத் தவிர வேறு வழியே கிடையாது. அப்படியே அறுவைச் சிகிச்சை செய்து வால்வுகளைச் செப்பனிட்டாலும், செயற்கை வால்வுகள் பொருத்தினாலும் அது இப் பிரச்னைக்கு நிரந்தரமான தீர்வாக

இருக்கவே முடியாது. வால்வுகள் மீண்டும் பழுதாகக்கூடும். செயற்கை வால்வுகள், ஆண்டவனின் படைப்பான இயற்கை வால்வுகளுடைய மிகக் கரடுமுரடான வடிவமே! எனவே, மூட்டுவாத இருதய நோய் தாக்குதலுக்கு உள்ளானவர்களுடைய ஆயுளைத் தற்காலிகமாகச் சற்று நீடிக்கச் செய்யலாமே தவிர அவர் நோயைக் குணப்படுத்தி முழு ஆயுட்காலத்துக்கும் வாழச் செய்வது மிகவும் சிரம சாத்தியமானதே. இந்த நோயாளிகளின் சராசரி ஆயுட்காலம் இருபது ஆண்டுகள்தான்!

''சின்னஞ்சிறு வயதில் இந்த நோய் அதிகமாகத் தாக்குகிறது. ஐந்து முதல் பதினைந்து வயது வரையிலான மூட்டுவாத இருதய நோயாளிகள்தான் அதிகம். சுகாதாரக் குறைவான, ஈரம் கசியும் குடியிருப்புப் பகுதிகளிலும் காற்றோட்டமில்லாத கூட்டம் நிறைந்த இடங்களிலும் இந்த நோய் பல்கிப் பரவும். சரியான விகிதத்தில் சத்துணவு சாப்பிடாத குழந்தைகள் உடலில் எதிர்ப்புச் சக்தி இன்மையால் உடனே பாதிக்கப்படுவார்கள்.

''இந்த நோய் வராமல் தவிர்க்க, தடுப்பு மருந்து உருவாக்க முடியுமா என்ற ஆராய்ச்சி நடந்து வருகிறது. பாதிக்கப்பட்ட குழந்தைகளை ஆரம்பக் கட்டத்திலேயே கண்டுபிடித்து, சிகிச்சை அளித்துக் குணப்படுத்தும் முயற்சியும் மேற்கொள்ளப்பட்டுள்ளது. தமிழக அரசு, பள்ளி மாணவர்களின் மருத்துவப் பரிசோதனைத் திட்டத்தில் இந் நோய்க்கான பரிசோதனையையும் சேர்த்துக் கொண்டுள்ளது. ரோட்டரி சங்கம் இந்த முயற்சியில் உதவப் போகிறது.

''நோய்க்கான மூல காரணத்தை ஒழிக்க வேண்டுமானால், நாட்டின் பொருளாதாரம், சுகாதாரம், கல்வியறிவு ஆகியவை மேம்பட வேண்டும். இல்லாவிட்டால் நாட்டின் மிகப் பெரிய சொத்தான மனித வளத்தை— அதுவும் இளைய சமுதாயத்தை— இழந்து கொண்டேயிருப்போம். இப்போது ஆறு மில்லியன் குழந்தைகளுக்குச் சிகிச்சை அளிப்பதற்காக ஆறு மில்லியன் பெற்றோர்கள் வேலை வெட்டியை விட்டு விட்டு ஆஸ்பத்திரிகளில் காத்திருக்கிறார்கள். கோடிக்கணக்கான ரூபாய்கள் இலவச சிகிச்சைக்குச் செலவு செய்யப்படுகிறது. நாட்டின் பொருளாதாரத்துக்கே இந் நோய் பெரிய சுமையாக இருக்கிறது. எனவே பொருளாதார சிரமத்தைப் பார்க்காமல், இந்த நோயைத் தடுப்பதற்கான முயற்சிகளை நாம் மேற்கொண்டால், அதன் மூலம் கிடைக்கும் பலன் நிரந்தரமானதாக இருக்கும்.

''இப்போது நம் நாட்டில் செய்யப்படும் இருதய ஆபரேஷன்களில் ஐம்பது சதவிகிதம் இந்த நோய்க்காகச் செய்யப்படுபவையே. நான் இந்த ஒரு வாரத்தில் செய்யப் போகும் எல்லா ஆபரேஷன்களும் மூட்டுவாத இருதய நோய்க்கான ஆபரேஷன்கள்தான்! இந்த ஆபரேஷன்களின் எண்ணிக்கை கணிசமாகக் குறைகின்ற நாள்தான் நம் எல்லோருக்கும் மகிழ்ச்சிகரமான நாள்'' — என்று முடித்தார் டாக்டர் சாலமன் விக்டர்.

— நமது நிருபர்கள்.

படம்: ரமணன்

# வட்டமேஜை

# வெள்ளமாக ஓடிய வைரம், மாணிக்கம்...!

* ஒரு காலி இடத்திற்கு ஒன்பதாயிரம் பேர் மனுப் போடும் இக்கால கட்டத்தில் 'செய்யும் தொழிலே தெய்வம்' என்ற தாரக மந்திரத்தை அறியாத சுப்பிரமணியன் பி.ஏ. வுக்கு, வாழ்க்கையின் மேடு பள்ளங்களை அனுபவ ரீதியில் உணர்ந்த ஞானாசிரியனாக இருந்து நன்னெறி காட்டுகிறார் டிரைவர் முருகேசன். இக் கதையின் முதல் சிறப்பம்சம் 'கரு'தான். இரண்டாவது, ஆர்ப்பாட்டமில்லாத, மொழிச் சுமை இல்லாத மிக எளிய நடை. இன்றைய இளைஞர்களுக்குத் தன்னம்பிக்கை தரும் படைப்பு. பாராட்டுக்கள்!

ஸ்ரீரங்கம், மாலினி சௌரிராஜன்.

* சுப்பிரமணியன் பி. ஏ. கதையில் லாரி டிரைவர், பட்டதாரியான கிளீனர் சுப்பிரமணியத்துக்குச் சொன்ன அறிவுரையைப் படித்தேன். மறுபடியும் படித்தேன்; மீண்டும் படித்தேன்; என்னவொரு இனிமை! வைரங்களும், மாணிக்கங்களும் வெள்ளமாக ஓடியது போலிருந்தது. ஓர் அருமையான, அதி அற்புதமான கருத்தை அடிப்படையாகக் கொண்டு அதை அழகான நடையில் சொன்ன அறிமுக எழுத்தாளருக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

வேலூர், கே. வெங்கடேசன்.

* 'சிவகாமியின் சபதம்' 'பொன்னியின் செல்வனு'க்கு விட்டுக் கொடுக்காது என்பதை முதலிரண்டு அத்தியாயங்களைப் படித்த போதே புரிந்து போயிற்று. அமரர் 'கல்கி'யின் திறமைகளை எங்களைப் போன்ற இளைய தலைமுறையினர்க்குப் புரிய வைக்கும் "கல்கி" இதழுக்கு எங்களது மனமார்ந்த நன்றி!

பொன்விழாவையொட்டி மாணவர்களுக்குச் சிறப்புப் போட்டிகள் வைத்தது குறித்து மாணவர்கள் சார்பாக மனமார்ந்த நன்றி.

சுந்தம்பாளையம், ஈ. திருவருள் செல்வன்.

* சிவகாமியின் சபதம் முதல் அத்தியாயத்திற்கு ம. செ. வரைந்த ஓவியத்தைப் பார்த்தேன். அசந்து போனேன். ஒரு சினிமாக் காட்சியைப் பார்ப்பது போல், அட்டகாசமான உயிரோட்டத்துடன் இருந்தது. அடுத்த வாரத்தை ம. செ. வுக்காக, அவரது கை வண்ணத்திற்காக ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

மயிலாடுதுறை, ஆர். சீதா ராணி.

* தலையங்கம் கண்டேன். ஒன்று தெளிவாகிறது: பி.ஜே.பி. நினைத்திருந்தால் தேசிய முன்னணியை எப்போதோ காலை வாரி விட்டிருக்கும். ஆனால் அப்படிச் செய்யாமல், செய்து கொண்ட உடன்பாட்டிற்கு உறுதுணையாக நடந்து, அதே சமயம் தவறுகளைச் சுட்டிக் காட்டி வரும் அதன் ஒப்பற்ற பாங்கினை, ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

கும்பகோணம், எஸ். கே. மூர்த்தி.

* செஸ்: ஒரு செக் லிஸ்ட் என்ற தலைப்பில், வி. காமேஸ்வரன் தொகுத்தளித்திருந்த செஸ் விளையாட்டைப் பற்றிய செய்திகள் அவ் விளையாட்டின் மீது இதுவரை ஈடுபாடில்லாதவர்களைக் கூட சிந்திக்க வைத்துள்ளன.

டாக்டரிடம் சிலகேள்விகள் என்ற புதிய பகுதி சிறப்பாகப் படைக்கப்பட்டிருந்தது. பயனுள்ள இப் புதிய பகுதி தொடர வேண்டும்.

தோட்டக்குறிச்சி, இரா. வளையாபதி.

* புஷ்பவனம் அவர்களின் பேட்டி காரசாரம்! ஓடாத ரெயிலுக்கு டிக்கெட் அளித்த ரெயில்வேயின் கவனக் குறைவால் எவ்வளவு இன்னல்களைத் திருமதி மேத்தா கார்னிக் அடைந்தார் என்பதைப் படித்த பிறகு ரெயில்வே மீதிருக்கும் மதிப்பு நமக்குக் குறைகிறது! நம் மாநிலத்தில் உபயோகிப்பாளர் குறைதீர்க்கும் கமிஷன் இல்லை என்பதைப் படித்தவுடன் நம் அரசு மக்கள் மீது எவ்வளவு கவனம் வைத்துள்ளது என்பதையும் தெளிவாக அறியலாம்!

சென்னை — 39, அ. க. கிருட்டிணன்.

* 'அரசு வேலை தரும்' என்ற ஒரே நம்பிக்கையில் போஸ்டல் ஆர்டர்களாக வாங்கி அனுப்பிக் கொண்டிருக்கும் நம்மூர் படித்த, பட்டதாரி இளைஞர்கள் வெற்றிக் கதைகளைப் படித்த பிறகேனும் தங்களை மாற்றிக் கொள்வார்கள் என நம்புவோமாக.

சென்னை — 2, இரா. சாந்தகுமார்.

* பிரசுரிக்கப்பட்ட தனி மனித வெற்றிக் கதைகள் 'நாணயம் இருந்தால் வாழலாம்' என்று அறிவுரை கூறி 'மனதில் உறுதி வேண்டும்' என்று உற்சாகப்படுத்தி 'இன்று நான் நம்பர் ஒன்' என்ற நம்பிக்கையும் ஊட்டுகின்றனவே! இளைய தலைமுறை கண்டிப்பாகப் படிக்க வேண்டியவை!

சென்னை — 14, ஐயாறு. எஸ். வாசுதேவன்.

* திரைச் செய்தியில் சி. பி. ஐ. டைரி குறிப்பு தெலுங்கில் 'டப்' செய்யப்பட்டு அதில் ராஜசேகரும், சிதாவும் நடிப்பதாகக் குறிப்பிட்டுள்ளீர். 'டப்'பிங்கில் அரிதாரம் பூசியவர்கள் எங்கே மாறுகிறார்கள்? மொழி தானே மாறுகிறது! எனவே 'ரீமேக்' என்று குறிப்பிட்டிருக்க வேண்டும்.

சென்னை — 92, வி. ராஜ் கோபால்.

* "கல்கி பொன் விழா பரிசுத் திட்டத்தில்" வாசகர்களுக்கு வைத்திருக்கும் போட்டி (யோசனை கூறுவது) மாபெரும் வித்தியாசமான கருத்துப் போட்டி!

மா. சாவடி, பா. து. பிரகாஷ்.

* டாக்டர் — கேள்வி பதிலில் ஸ்டீராய்ட் பற்றி மேலும் ஒரு விளக்கம்: நம் எல்லோரது உடலிலும் ஸ்டீராய்ட் ஹார்மோன்கள் இயற்கையாகச் சுரக்கின்றன. பருவ வளர்ச்சி, தசை வளர்ச்சி, தாய்மைப் பேறு போன்றவை இந்த (ஹார்மோன்கள்) சுரப்பிநீர்களாலேயே ஏற்படுகின்றன. அவை போதாமல் தான் செயற்கையாகத் தயாரிக்கப்பட்ட ஹார்மோன்களை (Synthetic Steroids) விளையாட்டு வீரர்கள் உபயோகிக்கிறார்கள். ஸ்டீராய்டுகள் பல வியாதிகளைக் குணப்படுத்தவும் உபயோகிக்கப்படுகின்றன. ஆனால் டாக்டரின் மேற்பார்வை தேவை.

சென்னை, எல். எஸ். பாலாஜி.

# தேவிலாலிடம் பிடித்த அம்சம்?

* வசந்தா காந்த், கருப்பம்புலம்.

? மதனகாமராஜன் படத்தில் கமல் நாலு வேடங்களில் நடிக்கிறாராமே?

! நாலு என்ன, அதற்கு அதிகமாகவும் வேடங்கள் ஏற்று நம்மைக் கவரக்கூடிய ஆற்றல் அவருக்கு உண்டு — கதையும் இயக்குனரும் சரியானபடி அமைந்து விட்டால்!

* எஸ். தங்கமணி, சத்திரப்பட்டி.

? 'சில பத்திரிகையாளருக்கு ஒரு நல்ல செய்தி: எனக்குக் கொஞ்சம் உடல் நலமில்லை. அவர்களுக்கு ஒரு கெட்ட செய்தி: நாளைக்குச் சரியாகிவிடும்!' என்று முரசொலியில் கருணாநிதி எழுதியிருக்கிறாரே. அதற்கு என்ன அர்த்தம்?

! அவருடைய இந்த மெலிதான, ரசனை



* பிடித்த அம்சம்

யான, நல்ல நகைச்சுவையைப் புரிந்து கொள்ளும் ஆற்றல் உங்களுக்கு இல்லை என்று அர்த்தம்!

* ராஜேந்தர் பிரியன், திருச்சி.

? 'அ. தி. மு. க. பிளவுக்குக் கருணாநிதி தான் காரணம்' என்கிறார்களே?

! இப்படி கூறுகிறவர்கள், 'பெனாசிர் பதவி இழப்புக்கும் கருணாநிதிதான் காரணம்' என்று உளறினாலும் வியப்பதற்கில்லை.

* புலவர் எஸ். கே. மூர்த்தி, கும்பகோணம்.

? 'வெறி தலைக்கேறி விட்டால் கல்கி எல்லோரையுமே கடித்துக் குதறும் போலிருக்கிறது' — குங்குமம் இதழில் வெளியான இந்தப் பதிலைக் கவனித்தீரா?

! இந்தப் பதிலே உங்களுக்கு உணர்த்தியிருக்கும், யாருக்கு வெறி தலைக்கேறியுள்ளது, யார் கடித்துக் குதறுகிறார்கள் என்று. கல்கியில் தவறு ஏதும் நேர்ந்து விடக் கூடாது என்பதில்தான் நாங்கள் கருத்தாக இருக்கிறோம். சில சமயம் நம்மை மீறி தவறு நேர்ந்து விட்டால், (எந்தப் பத்திரிகையில் தான் தவறு நேராமல் இருக்கிறது?) அதை ஒப்புக் கொண்டு தவறைத் திருத்திக் கொள்ளும் நேர்மையும் துணிவும் நமக்கு உண்டு. வேறு எதை எதையோ சொல்லிப் பிரச்னையைத் திசை திருப்பிக் குட்டை குழப்பும் விவகாரம் நமக்குத் தெரியாத 'கலை'!

* அ. முஹம்மது நிஜாமுத்தீன், நீடூர்.

? தேவிலாலிடம் உங்களுக்குப் பிடித்த அம்சம்? (ஹையா, சிக்கலான கேள்வி கேட்டு விட்டேனே!)

! அவருடைய முண்டாசு! (ஹையா, பதில் சொல்லி விட்டேனே!)

* டி. என். பாலகிருஷ்ணன், சென்னை.

? கலைஞரின் 'சங்கத்தமிழ்' நாட்டிய நாடகம் சென்னை தொலைக்காட்சியில் ஒளிபரப்பானது பார்த்தீரா?

! பார்த்தேன், மூன்று நிமிஷங்கள்!

* ம. செந்தில்நாதன், மதுரை. *

? 'இந்தப் பதவி நீக்கம் நகர்ப்புறத்தில் இருந்து வந்தவர்களுக்கும் கிராமங்களிலிருந்து வந்தவர்களுக்கும் இடையே நடக்கும் போராட்டம்' என்ற தேவிலாலின் வர்ணனை பற்றி...?

! நம் நாட்டில் ஏற்கெனவே உள்ள வகுப்புவாத, ஜாதி, மத வேற்றுமைகள் போதாது என்று புதிதாக ஒரு வேற்றுமை பூதத்தை உருவாக்கி உலவ விடுகிறார் தேவிலால். மிக மிக ஆபத்தான போக்கு இது. கிராமப்புற மக்களுக்கு, குறிப்பாக விவசாயிகளுக்கு நம் நாட்டில் காட்டப்பட்டு வரும் சலுகைகள் கொஞ்ச நஞ்சமல்ல. மேலும் பல சலுகைகளை இன்றைய தேசிய முன்னணி அரசு திட்டமிட்டுச் செயல்படுத்தி வருகிறது

* தங்கமங்கையை



* வென்றவர்



* சாமர்த்தியப் பேச்சு



* உதறி விட்டவர்



* நாலு வேடங்களில்



என்பது அனைவரும் அறிந்தது. ஒரு சாரா ருக்குக் காட்டப்படும் சலுகை, இன்னொரு சாரார் மீது ஏற்றப்படும் சுமை என்பதை யாருமே மறக்கக் கூடாது.

* என். ஆர். சுப்பிரமணியம், பூனாம் பாளையம்.

? தேவிலால் டிஸ்மிஸ் செய்யப்பட்டதால், ஆட்சி மாற்றம் ஏற்பட வாய்ப்பு உள்ளதா?

! மத்தியில் மட்டுமின்றி ஹரியானாவிலும் 'ஆட்சியில் மாற்றம்' ஏற்பட வாய்ப்பு உண்டு. 'ஆட்சி மாற்றம்' அல்ல!

* ஆர். ஸ்ரீதரன், கும்பகோணம்.

? 'இலங்கை சண்டையில் இந்தியா தலையிட வேண்டும்' என்று கிட்டு கோரி யுள்ளது பற்றி?

! 'காரியம் ஆகிற வரை காலைப் பிடி...' என்கிற வசனம் புலிகளுக்கும் பொருந்து வதைப் புரிந்து கொண்டு விட்டது இந்திய அரசு. அதனால், லண்டனில் உள்ள



இந்தியத் தூதுவர், கிட்டுவுடன் பேசக் கூட வேண்டாம் என்று தடை விதிக்கும் அளவுக் குப் போய் விட்டது!

* எஸ். கண்ணன், திருச்சி.

? 'கிசுகிசு — புத்திசாலி நிருபர்களின் முட்டாள்தனமான வேலை' என்று அமலா கூறியிருப்பது பற்றி?

! நிருபர்களைப் பகைத்துக் கொள்ள விரும்பாத, கிசுகிசு பிடிக்காத அமலாவின் சாமர்த்தியப் பேச்சு.

* அ. முஸ்தபா, தக்கோலம்.

? வருடா வருடம் சுதந்திர தினம் எதற்காகக் கொண்டாடப்படுகிறது?

! கொடியேற்றும் அரசியல்வாதிகளுக் காக, மிட்டாய் பெறும் குழந்தைகளுக்காக, விடுமுறை விரும்பிகளுக்காக...

* தஞ்சைத் தரணியன், முத்துப்பேட்டை.

? 'கல்கி, பக்கா பி. ஜே. பி. இதழ்' என்கி

* ரூ. 20 பரிசு பெறுபவர்:
ம. செந்தில்நாதன்,
276, முத்துராமலிங்கத்
தேவர் தெரு,
பி. பி. குளம், மதுரை — 2.

றேன், சரியா?

! பி. ஜே. பி. என்ன, எந்தக் கட்சியுமே கல்கியைத் தன் ஜேபிக்குள் போட்டுக் கொண்டு விட முடியாது.

* மேலை பழ. நாகப்பன், சென்னை.

? தங்க மங்கையை வென்ற அஸ்வினி நாச்சப்பா பற்றி?

! தங்க மங்கையை மட்டுமின்றி, அவரைப் போல் தங்க மெடல்களையும் வெல்ல வேண்டும். இந்த நமது நம்பிக்கை நட்சத்தி ரம்.

* வித்யா, தர்மபுரி.

? எம். சி. சி. (மெல்போர்ன் கிரிக்கெட் கிளப்) அளிக்க இருந்த கௌரவத்தை உதறி விட்டாரே, காவஸ்கர்?

! ஓரிருமுறை அவர் அங்கே அவமானப் படுத்தப்பட்டதால் இந்த முடிவு என்று ஊக மாகத் தெரிய வருகிறது. ஆனால் இப்படிப் பட்ட அனுபவங்கள் நம் நாட்டிலேயே கிருஷ்ணய்யர், ஓவியர் ஹுசேன் போன் றோருக்குச் சமீபத்தில் கூட ஏற்பட்டிருக் கிறதே. எனவே, உள்ளே புகுந்து கொண்டு எடுத்துச் சொல்லி, நிலைமையைச் சீர் திருத்த முயல்வது கூட சரியாகத்தான் இருந் திருக்கும். இனி, டூ லேட்!

* சித்திரப் பிரியன், வேலூர்.

? கட்சித் தலைவர்களை மாத்திரம் நடிக்க வைத்து ஒரு படம் எடுத்தால் எப்படி இருக் கும்?

! வேறு எப்படி, நம் நாட்டின் இன்றைய நிலைமையைப் போல்தான் இருக்கும்!

> மணக்க மணக்க அவியல், பொரி யல், அப்பளம், வடை என்றெல்லாம் பரிமாறிவிட்டு, .பழைய சோற் றைப் பிழிந்து மையத்தில் 'சொத்' தென்று வைத்தாற் போலிருக்கிறது.

எங்கே காதல் ஜோடி சேர்ந்தாலும் அதைப் பிடித்து நசுக்கிப் போடுவதில் குரூர திருப்தி காணும் வக்கிரக் கொடியவராய் விளங்குகிறார் பண்ணை ராஜேஷ். இதற்கு ஏதோ தானோ என்று ஒரு காரணத்தை உருவாக்கியிருக்கிறார்கள்.

புயலாய்ப் புகும் விஜயகாந்த் செமை சூப்பர் ஸ்டண்ட் காட்டி, பண்ணை அடியாட் படைகளைத் தனியாய் நின்று சும்மா பாத வீச்சினாலேயே பந்தாடுகிறார் பாருங்கள் — படத்தில் பாதித் திட்டத்துக்கு மேல் அதேதான்! அது அலுத்துப் போனால் முரட்டுக் குதிரையை அடக்குகிற மாதிரி பானுப்ரியாவை ஒரு மார்திரியாய் பெண்டு எடுக்கிறாரே, ரசிக (மன்ற?) மகா ஜனங் களின் உற்சாகச் சீழ்க்கையொலியை அள்ளிக் கொண்டு போகிறார். அப்பா விஜயகாந் தின் முதிர்ச்சியில் அழுத்தக் கரகரப்புக் குரல் படுபாந்தம். காரெக்டர் முத்திரை காட்டுகிறது.

ராஜேஷுக்குச் சவால் விட்டபடி அவர் பெண்ணைத் தான் மணமுடிக்கும் நாள் குறித்துச் சொல்லி வெற்றிக் கொக்கரிப்புக் காட்ட வரும் அந்தக் கடைசி தருணத்தில், அவரின் மருமகளாய் இருப்பவள் தன் உடன் பிறந்த (இரட்டை) சகோதரி என்று அறிந்து களிகூர்ந்த மறு நொடியில், 'நீ இப்பவே இந்த ஊரை விட்டுச் சொல்லிக் காமே வெளியேறிடு. இல்லே, உன் தங்கை வாழாவெட்டியா எங்ககிட்ட இல்லாத கொடுமையெல்லாம அனுபவிக்கறதைப் பார்ப்பே,' என்று பாசவலை வீசி மோசடி பேசும் கட்டத்தில், எல்லாம் தோற்றுச் சோர்வுடன் திரும்பும் காட்சியில் தொடு கிறார்.

அநியாய மாடர்ன் டிரெஸ் பானுப்ரியா வுக்கு. கதாநாயகி அந்தஸ்துக்கு இழுத்துக் கொண்டு வந்து சேர்க்க என்னதான் டைரக் டர் பாடுபட்டாலும், குருட்டு ஈ மாதிரி அந்த நிர்தாட்சண்ய மிடுக்குத்தானே திரும்பத் திரும்ப வந்து உட்காருகிறது?

கணவனுக்கு அடங்கிய [illegible] மனைவியாய்ப் பூச்சி போன்றிருக்கும் ஜெய பாரதிதான் — கணவனின் அத்தனை சதியை யும் உடைத்து, சிறையில் அடைபட்டிருப் பவர்களுக்குச் சின்ன மலர் பூக்கக் காரண மாயிருந்ததோடு, அதனை இத்தனை பெரிய பழிவாங்கு புயலாய் உருவாக்கியவர் என்று அறியும் போது, 'அட!' என்று ஒரு சிலிர்ப்பு ஏற்படத்தான் செய்கிறது.

பானுப்ரியாவின் தங்கை சாந்தி ப்ரியா. ரொம்ப அசிங்கமெல்லாம் பண்ணி விட்டு, கடைசியில் முகமூடிக் கொள்ளைக்காரி மாதிரி வந்து பானுப்ரியா கழுத்தில் சங்கிலி போட்டு இருக்க, விஜயகாந்த் காப்பாற்றி விளக்கம் கேட்க, கொக்கு தலை வெண் ணெய் கதையாக ஏதோ விளக்கம் தரு கிறார்.

தேவலை ராஜேஷ்! பழக்கப்பட்ட பாத்தி ரம்தான் என்றாலும் ஆத்திரத்தை அமர்க் களமாய் அள்ளித் தெளித்திருக்கிறார். கண் மையைக் கொஞ்சம் குறைத்திருக்கலாம்.

எஸ். எஸ். சந்திரனுக்குச் சுய வசனத் தடை விதிக்கும் டைரக்டர் இனியாவது எவரேனும் வந்தால் அவருக்கு என் முன்னார்ந்த பாராட்டுக்கள். எரிச்சல்!

இளையராஜா இசை, படத்தின் களிப் பூட்டும் நோக்கத்தைப் புரிந்து கொண்டு பரபரப்பு ஏற்றுகிறது.

டைரக்டரே காமெராக்காரராய் இருப் பதில் ஒரு சௌகரியம். கனவுக் காட்சி களில் புகுந்து விளையாடியிருக்கிறார்.

— பி. எஸ். எஸ்.




வெல்வெட் ராணிக்கு நன்றி!
கதை: ஜானி
படம்:
என்னங்க, இன்னிக்கும் நீங்க வெளியே போகணுமா?
இதென்னடி கேள்வி!
இல்லே... இன்னிக்கு என் பர்த்டே... அதனாலே ஒரு வேளை என்னோட இருக்கப் பிரியப் படுவீங்களோன்னு ஒரு சபலம்...
நான்சென்ஸ்... இன்னிக்கு என்னோட எஸ்டேட் பங்களாவை சினிமா ஷூட்டிங்குக்கு விட்டிருக்கேன். வெல்வெட் ராணி டான்ஸ் சீன்... நான் போயே ஆகணும்.
ராமா! ராமா! உங்களை மாதிரி என் கணவர் இருக்கக் கூடாதா? இப்படிப் பெண் பித்துப் பிடிச்சு அலைகிறாரே, இதற்கு ஒரு முடிவு கிடையாதா?
எஸ்டேட் பங்களாவில்...
டைரக்டர் சார்! கரெக்டா பன்னிரண்டரை மணிக்கு என்னை அனுப்பிடணும்... கண்டிஷன்...


ஆகட்டுங்க...
அப்புறம் இன்னொண்ணு... டான்ஸ் ஷூட்டிங்கின் போது டெக்குக்கு சம்பந்தமில்லாத ஆளுங்களை உள்ளே விடாதீங்க... புரிஞ்சுதா...
டைரக்டர்
என்ன டைரக்டர் ஸார்...
ஸாரி மிஸ்டர் நாமோதரன்... ஸிஸ்டர் சொன்னதைக் கேட்டீங்க இல்ல..
கேட்டேன் கேட்டேன்... இதுக்கெல்லாம் பயப்பட்டா முடியுமா? நான் ஹவுஸ் ஓனர் இல்லையா?..
அதுக்குத்தான் வாடகை தந்திட்டோமே? ஆளை விடுங்க...
அப்படி என்னாங்க, இவ உலகத்திலே இல்லாத அதிசயமா?
ஆமா, நாமோதரன். வெல்வெட் ராணி ஒரு அதிசயப் பிறவிதான்...
இவங்க புருஷன் ஒரு ஆக்ஸிடென்ட்லே கால்களை இழந்து சக்கர நாற்காலியிலே இருக்காரு. அவரைக் காப்பாத்தறது தான் தன் முதல் கடமைன்னு இவங்க நினைக்கிறாங்க...


அவருக்குச் சாப்பாடு நேரம் தப்பிடக் துன்னு தான் பன்னிரண்டரை மணிக்குள் ஷூட்டிங்கை முடிக்கக் கண்டிஷன் போட்டாராங்க... சரி நான் லைட்டிங் செட் பண்ணப் போகிறேன்...
நான் கேவலமா எண்ணிய வெல்வெட் ராணி எவ்வளவு உசத்தி! ஊனமுற்ற கணவனை விசுவாசத்துடன் காப்பாற்றுகிறாள்... நானோ சொர்ண விக்கிரகம் போன்ற மனைவியை அலட்சியம் செய்து ஊர் மேய்ந்து கொண்டிருக்கிறேன்...
என்னாங்க இது, இத்தனை சீக்கிரம் வந்துட்டீங்க...? வழக்கமா ராத்திரி இரண்டு மணி ஆகுமே...!
இன்னிக்கு உன் பர்த் டே இல்லையா, உன்னோட இருக்கலா மேன்னுதான்
இனி என்றைக்கும் எப்போதும் உன்னோடுதான் இருப்பேன். தப்பு வழிகளில் போகவே மாட்டேன்... சரியா...?
ராமா! என் பிரார்த் தனைக்குச் செவி சாய்த்ததற்கு நன்றி...
வெல்வெட் ராணி! என் மனைவியின் அருமையை எனக்கு உணர்த்தியதற்கு நன்றி!



பனியில் நனைந்த மலர் போல் குளுமை நிறைந்த புதுமை!
கிரௌன் ஹெர்பல் ஷாம்பூ, சித்த வைத்திய முறைப்படி மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்படுவது.
எல்லா வகைக் கூந்தலுக்கும் ஏற்றது. கூந்தலைச் சுத்தம் செய்வதோடு பாதுகாப்பும் அளிக்கிறது.
கூந்தலின் வேர்க்கால்களில் உள்ள ஊட்டச் சத்துகளையும் ஈரப் பசையையும் காத்து கூந்தலுக்கு வலுவூட்டுகிறது.
கூந்தலைச் சீராகப் பதப்படுத்தி இயற்கையான நிறத்தையும் பொலிவையும் மீட்டுத் தருகிறது.
ஒவ்வொரு முறையும் குளிர்ச்சியும் புத்துணர்ச்சியும் மலரச் செய்கிறது.
CROWN
HERBAL SHAMPOO
CROWN
கிரௌன்
ஹெர்பல் ஷாம்பூ
Insight- CHP-1042

**பரிசு: சுஜாதா**

**வாசகர் விமர்சனம்!**

# மத்யமரின் தனிக்குண முத்திரைகள்

### மத்யமரின் தனிக் குண முத்திரைகள்!

நடுத்தர வர்க்கத்தினரின் வாழ்க்கையின் முக்கிய அம்சங்களை, ஒரே ஒரு சிறுகதையில் இவ்வளவு சிறப்பாகச் சொல்ல முடியுமா? ஆச்சரியம்தான்! "ஏர் டிக்கெட்டா, ஏரோப்ளேனா?" என்று கேட்கும் அப்பாவித்தனமாகட்டும்; பரிசு கிடைத்த செய்தியை வார பலனுடன் ஒப்பிடுவதாகட்டும், எல்லாமே மத்யமரின் தனிக் குணத்தைக் காட்டும் முத்திரைகள். "இன்னும் சரியாத் தெரியலை மாமி" என்று கூட்டுக்குள் சுருங்குவது போல் பேசுவதும், எப்போதும் தன் காரியமே பெரிது என்று எண்ணும் பட்டம்மாள் போன்றோரின் "சப்பாத்திக்கல்" கோரிக்கையும், "ஏதாவது ட்ரிக் இருக்கப் போகிறது. எல்லாமே ப்ளேனா?" என்ற பொறாமைப் பேச்சும், மத்யமரின் விசேஷ குணங்களல்லவா?

"நான் தெருக்கோடி தாண்டினதில்லே;" "கிழிஞ்சு போன பெட்ஷீட்டைப் போர்த்திண்டிருக்கேன்" — போன்றவை காட்டும் சுயபச்சாதாபம்; டெல்லிக்கு 'பேக்' செய்யும் ஆர்வம்; ஓரளவு வெளி உலகம் தெரிந்ததால் 'வாங்க வேண்டிய லிஸ்ட்'டைக் குறைக்கச் சொல்லும் பாச்சாவின் ஆலோசனை; ஊரில் இல்லாத நேரத்தில் வீட்டைக் கவனிக்கப் பூர்ணிமா செய்யும் ஏற்பாடுகள் இவை அனைத்துமே அக்குடும்பத்தைக் கண் முன் நிறுத்துகின்றன. பூர்ணிமா, இறுதியில், "இன்னொரு தடவை ப்ரைஸ் விழுந்தால் பார்க்கலாம்" என்று கூறும் போது கண்ணில் இருந்து நீரை உதிர விடாமல் நிறுத்தி விட்டாள். ஆனால் படித்த நான்...

ராணிப்பேட்டை.

இளங்கோவன்.

### அலை ஓயும் போது...

சம்சாரம் என்ற கடலின் அலை ஓயுமானால் பூர்ணிமா போன்ற பெண்களின் ஆசைக் கனவுகளும் நிறைவேறும். "கல்யாணம் ஆனதிலிருந்து நாங்க ஹனிமூன் கூடப் போனதில்லை, பாச்சா!" என்று தன் மைத்துனனிடம் பூர்ணிமா அப்பாவித்தனமாகக் குறைப்பட்டுக் கொண்டே, "நான் ஒண்ணும் குறையாச் சொல்லலை. டில்லி போறது, தாஜ்மகால் பார்க்கிறது என்றெல்லாம் நினைச்சுக் கூடப் பார்க்க முடியாத சமயத்தில் பெருமாள் பார்த்து ஒரு பரிசு கொடுத்திருக்கார் பாரு?" என்றும், பிறகு மைத்துனன் வேலைக்குக் காஷன் டிபாஸிட், மாமியார் ஆபரேஷன் என்று தன் கணவன் கூறும் காரணம் கேட்டு, "பரவாயில்லை! இன்னொரு தடவை ப்ரைஸ் விழுந்தால் ஆக்ரா பார்த்துக்கலாம் என்றும் தன் கண்ணீரை அடக்கிக் கொண்டு சொல்லும் சந்தர்ப்பங்களில் என் கண்கள் குளமாகின. என் வாழ்க்கையின் மலரும் நினைவுகளைப் போன்றே அமைந்திருந்தது.

சென்னை, சரஸ்வதி வெங்கடேச்வரன்.

### கனத்துப் போனது நெஞ்சம்...

சிறகு முளைத்ததும் சொந்தபந்தங்களை அறுத்துக் கொண்டு பறந்தோடுபவர்கள் நிறைந்துள்ள இந்த நாளில், தனது குடும்பத்தாருக்கு ஆற்ற வேண்டிய கடமைக்காக, கிடைத்தற்கரிய ஒரு வார ஐந்து நட்சத்திர ஓட்டல் வாழ்வைத் துறக்கும் கிருஷ்ண சாமிகள் இன்னும் நம்மிடையே உண்டு.

ரூ. 50 சிறப்புப் பரிசு பெறுபவர்:

டி. என். இளங்கோவன்,
QC/BHEL இராணிப்பேட்டை,
— 632 406.

மற்ற கடிதங்கள் ரூ. 25 சன்மானம் பெறுகின்றன.



கடைசியில் ஆசை நிறைவேறாது போகையில், ஒருவர் மற்றவருக்கு ஆறுதல் கூறி ஏமாற்றத்தைப் போக்கிக் கொள்ள முயல்வது நம் நெஞ்சைக் கனமாக்குகின்றது. அதே ஒண்டுகுடித்தனத்தில் இருந்து கொண்டு நேரில் கண்டது போன்ற நிறைவைப் பெற்றுத் தந்தது இந்தப் 'பரிசு.'

சென்னை, கோமதி ராஜன்.

## தனித்துவ நடை...

தனித்துவங்களுக்குள் பலப்பல தனித்துவங்கள் கொண்ட நடைக்குரியவர் சுஜாதா! எழுதுகோல் காமிரா போன்று செயற்படும் 'பரிசு' கதையில் தமிழ்ச் சமுதாயத்தின் ஒட்டுமொத்த 'சராசரி'த் தனத்தை அப்பட்டமாகக் கண்கள் முன் காட்சியாக்குகிறார். முடிவில்தான் மூச்சுவிடுகிறோம். நம்மை எட்டிப் பார்க்கிற 'பனியன் அணிந்த சீனிவாசன்களும், ராமசாமிகளும், நேற்றைய இளையராஜாவை முணுமுணுத்துக் கொண்டே நெற்றிக்குப் பொட்டு ஒட்டும் வயது வந்த பெண்களும், அட்டைக்கிரிக்கெட்டும் தையல் மிஷின், டிரான்சிஸ்டரின் சப்தக் கலவையும் — இவரின் சொல்கிற பாணிக்குள் சூட்சமமாய் மறைந்து கொண்டு, ஒலிக்கிற பாங்கு நமக்குக் கிறக்கமூட்டுகிறது; அந்தக் கிறக்கத்திலும், வாழ்முறையின் நிலைகள்; அதன் சிக்கல்கள்; சுகப்பான முடிவுகள்; அவற்றைத் தாங்கும் உயர் பண்புகள், உன்னதக் கோட்பாடுகள் அனைத்தையும் நமக்குத் தெள்ளத் தெளிவாய் உணர்த்தி விடுகிறார்; இது, தனித்துவம்; சுஜாதாவின் தனித்துவம்!!

சென்னை — 91, வ. பாலா சுப்ரமணியன்.

## கொடுத்து வைக்காத தாஜ்மகால்!

கிடைத்தற்கரிய வெற்றிக் கனியாகக் கிடைத்த நெல்லிக்கனியினைப் பாச்சாக்களுக்கும், அம்மாக்களுக்கும் பங்கு போட்டுக் கொடுத்துவிடும் குணம் உள்ள கிருஷ்ணசாமிகளுக்கும் பூர்ணிமாக்களுக்கும் முன்னர் தாஜ்மகால் கூடக் களையிழந்தே தான் காணப்படுகிறது. கிருஷ்ணசாமியையும், பூர்ணிமாவையும் பார்க்கக் கொடுத்து வைக்காத அந்தத் தாஜ்மகாலுக்காக வருந்தத்தான் முடிகிறது.

சென்னை, கோ. சுந்தரவடிவேலு.

## ஒளி கொடுத்து உருகும் பூர்ணிமா!

ஒரு சாதாரண டப்பா சினிமாவுக்கு டிக்கெட் கிடைக்காமல் வீடு திரும்பினாலே ஒரு வாரம் முகத்தைக் கோணிக் கொள்ளும் பெண்கள் உலவும் இச்சமுதாயத்தில் பிறருக்காக ஒளி கொடுத்து, தான் உருகும் மெழுகுவர்த்தி போன்ற ஒரு பாத்திரப் படைப்பு பூர்ணிமா. எவரெஸ்ட் சிகரத்துக்கு ஏறிவிட்ட அவள் ஏமாந்து போன பின்பும், 'இன்னொரு தடவை ப்ரைஸ் விழும்' என்ற நம்பிக்கையில் வாழ்கிறாள். அந்த உத்தமியின் கதையைப் படிக்கும் போது, "பிறருக்காக வாழ்பவர்களே வாழ்பவர்கள்; மற்றவர்களெல்லாம் இறந்தவருக்குச் சமமானவர்கள்" என்ற விவேகானந்தரின் கூற்றுதான் நினைவுக்கு வருகிறது.

பெங்களூர், பத்மா.

## சித்திரத்தில் மலர்ந்த செந்தாமரை!

ஆட்சி பீடத்தில் அமரச் சொன்ன போதும், 'நாடேது உனக்கு? காடேகு!' எனச் சொன்ன போதும் முகபாவத்தில் மாற்றம் ஏதுமின்றிச் சித்திரத்தில் மலர்ந்த செந்தாமரையை ஒத்த முகமாயிருந்தது ராமர் முகம்' என வருணிக்கிறார் கம்பர். அவர் அவதார புருஷர். அவருக்கு அது சாத்தியம்.

தெருக்கோடியையே தாண்டியிராத பூர்ணிமாவுக்கு, தனது எலிவளையை விட்டுக் கிளம்பி டில்லி, ஆக்ராவுக்குச் செலவின்றிப் பயணித்து, ஐந்து நட்சத்திர ஓட்டலில் தங்கி ஒரு வாரம் சுற்றி வரும் நிகழ்ச்சி கற்பனைக்கும் எட்டாத ஆடம்பரம். அந்த யோகம் 'கிட்டிய' நிலையிலும் சிறிதும் ஆர்ப்பாட்ட ஆடம்பரமில்லாமல் பக்கத்துப் போர்ஷன்காரர்களின் அற்பத் தேவைகளை அமைதியாகச் செவிமடுக்கிறார். இறுதியில், பணத் தேவை உந்தல் காரணமாக பிரயாணத்துக்கு ஈடாகப் பணம் பெற்றுக் கொண்டு விட்டதாகக் கணவன் கனத்த நெஞ்சோடு அறிவிக்கும் போதும் சோக ரேகை ஏதுமின்றி "பரவாயில்லை, இன்னொரு தடவை ப்ரைஸ் விழுந்தால் ஆக்ரா பார்த்துக்கலாம்," என்று சாத்தியக் கூறு இல்லாத ஒன்றுக்குப் பாத்தியதை கொண்டாடுவது போல் படு இயல்பாகச் சொல்லுகிறாரே அப்போது அந்த மத்யம குடும்பத் தலைவி அந்த அவதார புருஷனைப் போல மிக, மிக, மிக உயர்ந்து மிளிர்கிறாள்.

ஈரோடு, சி. நாச்சிமுத்து.

## கிழவனும் கிழவியும்!

நெல்லை மாவட்டத்தில் ஒரு ஊரின் பெயர் "கிழவநேரி!" சிதம்பரனார் மாவட்டத்திலுள்ள ஒரு ஊரின் பெயரோ "கிழவிப்பட்டி!"

— ரமா ராமநாதன்.

# உள்ளங்கால் வரை

# பாதுகாப்பு!

இந்தக் காலத்தில் 'டான்ஸில்' பற்றி அறியாதவர்களே அநேகமாக இல்லை என்று சொல்லி விடலாம். அவ்வளவு பிரபலமாகியிருக்கிறது. பெரும்பாலும் சிறுவர்களையே இந்த டான்ஸில் படாத பாடுபடுத்தி வைக்கிறது. இதனால் பெற்றோருக்குத் தொல்லை.

வாயின் உள்ளே தொண்டையில் உள நாக்குக்கு இரண்டு பக்கங்களிலும் சுண்டைக்காய் அல்லது கொட்டைப் பாக்கு அளவில் இரு சதை உருண்டைகள் உள்ளன. இது எல்லாருக்கும் உண்டு. இந்த டான்ஸில் வீங்கிப் பருத்துப் போகும் போதுதான் ஏகப்பட்ட தொல்லை கொடுக்கிறது.

ஆகாரம் சரியாகச் சாப்பிட முடியாது. உடல் பலவீனமாக இருக்கும். வளர்ச்சி குன்றும். அடிக்கடி ஜலதோஷம் பிடிக்கும். தொண்டைப்புண் வரும். சாப்பிட விரும்பி விழுங்கினால் வலிக்கும்.

பையனுக்கு அடிக்கடி ஜலதோஷம் பிடிக்கிறது; ஜுரம் வருகிறது என்று டாக்டரிடம் குறைப்பட்டால் "இவனுக்கு டான்ஸில் இருக்கிறது நீக்கி விடலாம்" என்று முன்பு கூறுவார்கள். டான்ஸில் ஆபரேஷன் சர்வ சகஜமாக இருந்தது. ஆனால் சமீப காலத்தில் அப்படி டான்ஸிலைச் சகட்டு மேனிக்கு நீக்கி விடுவது தவறு என்று மருத்துவ உலகம் உணர்ந்து கொண்டிருக்கிறது. 'இறைவனின் படைப்பில் ஒவ்வொன்றுக்கும் ஒரு பயன் உண்டு. அதைப் புரிந்து கொள்ளாதது நம் தவறுதான்' என்று சொல்கிறார்கள்.

உடலில் வியாதிக் கிருமிகள் புகுந்தால் அது பல்வேறு இடங்களில் பரவாமல் டான்ஸிலை மட்டுமே தாக்குமாறு செய்கிற ஆற்றல் சரீரத்துக்கு இருக்கிறது என்று கண்டறிந்திருக்கிறார்கள். எனவே, டான்ஸில் என்பது ஒரு பாதுகாப்பு அரணாகச் செயல்படுகிறது என்பது இன்று தெரிய வந்துள்ளது. இப்படிப்பட்ட ஓர் அரிய பெரிய விஷயத்தைச் சகட்டு மேனிக்கு வெட்டி எறிந்து விடுவதா?

டான்ஸில் ஆபரேஷன் இன்று மிகவும் குறைந்து விட்டது. ரொம்பவும் ஸெப்டிக் ஆகிப் புரையோடிப் போய்க் கஷ்டப்படுத்தினால் ஒழிய டான்ஸிலை டாக்டர்கள் நீக்க மாட்டார்கள்.

ஆனால் அதே நேரத்தில், டான்ஸில், அடிக்கடி நோய்க் கிருமிகளின் தாக்குதலுக்கு ஆளாவதால் குழந்தைகள் அவதிப்படுகின்றன. நம் நாட்டில் திரும்பின பக்கமெல்லாம் அசுத்தம்தானே? அதனால் நோய்க் கிருமிகள் நீர், காற்று, உணவு மூலம் உடலில் புகுவதும் டான்ஸிலைத் தாக்குவதும் சகஜமாகிறது. பெற்றோர்கள் குழந்தைகளைப் பார்த்துக் கவலைப்படுகிறார்கள். வேதனை அடைகிறார்கள். குழந்தைகள் அடிக்கடி நோய்வாய்ப்பட்டால் பெற்றோருக்கும் தொல்லைதானே?

ஆக, டான்ஸிலை நீக்கவும் கூடாது; அது அடிக்கடி நோய்க் கிருமிகளால் தாக்குதலுற்று, வீங்கிக் கொண்டு தொல்லை தரவும் கூடாது என்றால் என்ன செய்யலாம்? டாக்டரிடம் மருந்துச் சீட்டுப் பெற்று ஆண்டிபயாடிக் என்ற வீரிய மருந்துகளை விழுங்கலாம். அதனால் நோய் குணமானாலும் குழந்தையின் உடல் மேலும் பலவீனமடைவதைக் கண்டு கைகளைப் பிசையலாம். மருந்தினால் உண்டாகும் வேண்டாத உடன் விளைவுகளைப் பார்த்து வருந்தலாம். அல்லது குழந்தைகளுக்கு யோகாசனம் சொல்லித் தரலாம். அப்போது டான்ஸில்கள் நோய் எதிர்ப்புச் சக்தியை அதிகம் பெறுவதால் பாதிக்கப்படுவதில்லை. குழந்தைகள் ஆரோக்கியமாக விளங்கி, நல்ல வளர்ச்சி பெறுகின்றன.

டான்ஸில்களைப் பாதிப்புக்கு உள்ளாகாமல் காக்கும் ஆசனங்களில் முக்கியமானது சர்வாங்காசனம். சர்வாங்காசனத்தில்தான் கழுத்துப் பகுதி கசக்கப்பட்டு, உறுப்புக்கள் நல்ல பயிற்சி பெறுகின்றன. ரத்த ஓட்டம் கழுத்துப் பகுதிக்கு நிறையக் கிடைக்கிறது. இதனால் கழுத்துப் பகுதியில் உள்ள டான்ஸில் நன்கு பலமடைந்து, தன் பணிகளைச் செவ்வனே செய்கிறது. டான்ஸில் வீக்கம், தொண்டை வலி, ஜுரம்,





### அடுத்த இதழில்...

**ரிசப்ஷனிஸ்ட் தொழில்:**

**தீராத பிரச்னையிலும் மாறாத புன்னகை**

ஜலதோஷம் முதலியன எட்டிக் கூடப் பார்ப்பதில்லை. அதனால் குழந்தை ஆரோக்கியமாகவும் சந்தோஷமாகவும் ஓடி ஆடி திரிந்து விளையாடி நன்றாக வளர்கிறது.

சர்வாங்காசனம் தொண்டைப் பகுதியில் உள்ள தைராய்டு சுரப்பியை எப்படி நன்கு இயங்கச் செய்கிறது என்பதையும் பார்த்தோம். இதுவும் சிறுவர் சிறுமியரின் உடல் வளர்ச்சிக்கு உதவுகிறது என்பதால் இரட்டிப்புப் பலன் கிடைக்கிறது.

இன்னொரு முக்கியமான விஷயம். தைராய்டு சுரப்பிக்கு உணவிலிருந்து கிடைக்கும் அயோடின் சத்து தேவை. ரசாயனம் படித்தவர்களுக்குத் தெரியும் அயோடின் என்பது மிகக் குறைந்த உஷ்ணத்திலேயே வாயுவாகி மறைந்து விடும். எனவே பச்சைக் காய்கறிகளை வேக வைக்கும் போது அயோடின் ஓடியே போய் விடுகிறது. தைராய்டுக்குத் தேவையான அயோடின் கிடைப்பதில்லை. எனவே சுத்தமான பச்சைக் காய்கறி சிறிதளவாவது உணவில் சேர்கிறதா என்று கவனித்துக் கொள்ள வேண்டும். சுத்தமான என்ற சொல்லை மறக்கக் கூடாது. கீரைக்கு வேக வைத்தாலும் அயோடின் சத்தை வாயுவாகாமல் காப்பாற்றிக் கொள்ளும் ஆற்றல் இருப்பதாகக் கருதப்படுகிறது. அத்துடன் இதில் இரும்புச் சத்தும் மிகுதி. தினம் ஏதேனும் ஒரு கீரை வகை உணவில் இடம்பெறுவது ரொம்ப நல்லது.

காற்றைச் சுவாசிக்க இயற்கை அளித்தது மூக்கு. ஆனால் சிலர் அதைப் பயன்படுத்தாமல் வாய் வழியே சுவாசிப்பார்கள். மூக்கின் வழியே செல்லும் காற்றில் தூசுகள் வடிக்கட்டப்படுகின்றன. வாய் வழியே சுவாசித்தால் இந்தப் பணி சரியாக நடக்காது. தூசியோடு கிருமிகளும் நுழைந்து, தொண்டைப் பகுதியைத் தாக்கும். குறட்டைச் சப்தம் பலமாக எழும். 'அடினாய்ட்ஸ் இருக்கிறது' என்று அதற்கு ஒரு மருத்துவக் காரணம் கூறப்படலாம்.

சர்வாங்காசனம் ஒழுங்காகச் செய்து வந்தால் வாயினால் சுவாசிக்கும் பழக்கம் போய் விடும். தொண்டை, மூக்கு, வாய் முதலிய இடங்களில் உள்ள உறுப்புக்கள் அதனதன் பணிகளைக் கச்சிதமாகச் செய்து வரும். அத்துடன் வயிறு புடைக்கச் சாப்பிடக் கூடாது என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

முட்டச் சாப்பிட்டு விட்டுப் படுத்தால் உடனே வாய் திறந்து விடும். முக்கால் வயிறு நிரம்பியதுமே நிறுத்தி. அதிலும் பாதி அளவு வயிறு காலியாகும் வரை காத்திருந்து படுக்க வேண்டும். அதாவது, சாப்பிட்ட பிறகு இரண்டு மூன்று மணி நேரம் சென்று.

குழந்தை தூங்கும் போது மெலிதான தலையணை மேல் குழந்தையின் தலை மட்டும் இருப்பது போல் தாய்மார்கள் பார்த்துக் கொள்ள வேண்டும். இதில் கவனக் குறைவாக இருந்து சில தாய்மார்கள், குழந்தையின் தலை, கழுத்து, மார்பு முதலிய எல்லாமே தலையணை மேல் இருப்பது போல் தூங்கப் பண்ணிப் போடுவார்கள். அப்போது வாய் தானாகத் திறந்து விடும். பிறகு இதுவே பழக்கமாகிப் பெரியவர்களானாலும் மாறாது தொடரும். எனவே இரவு குழந்தைகள் சரியானபடி தலையணை மேல் தலை வைத்துப் படுக்கிறார்களா என்று பெற்றோர் பார்க்க வேண்டும்.

ஆக மொத்தம் சர்வாங்காசனத்தினால் இருதயம், தைராய்ட், அடினாய்ட், டான்ஸில் போன்ற பல முக்கிய உறுப்புக்கள் பயன்பெறுகின்றன. இவை உடலின் மற்ற எல்லா உறுப்புக்களும் செவ்வனே இயங்கத் துணை புரியும் முக்கிய விஷயங்கள் ஆனதால்தான் இதற்கு சர்வாங்காசனம் என்று பெயர் ஏற்பட்டதாகவும் கொள்ளலாம்.

ஆண், பெண் ஆகிய இரு பாலாருக்கும் சர்வாங்காசனத்தினால் ஏற்படும் நற்பலன்கள் பற்றி ஒரு புத்தகமே எழுதலாம். உள்ளங்கால் குத்து வலி, கால் வீக்கம் போன்றவற்றில் ஆரம்பித்து கண், மூக்கு, காது வரை எத்தகைய உடல் கோளாறு என்றாலும் அதனை நெருங்க விடாமல் தடுக்கும் ஆற்றல் சர்வாங்காசனத்துக்கு உண்டு!

(தொடரும்)

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: வெ. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543; 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.




இது சாதாரணம், பாருங்களேன். நான் சாக்லேட்களை கபளீகரம் செய்வது போல, வழக்கமாக ஸிபாகா ஃப்ளோரைட் உபயோகித்து என்னுடைய பற்களைத் தேய்க்கிறேன்.

ஸிபாகாவினுடைய செழிப்பான நுரை சுத்தப்படுத்தி எல்லா சாக்லேட் துணுக்குகளை நீக்குகிறது. அதனுடைய பிரத்தியேகமான ஃபார்முலா பற்கள் கெட்டுப் போகாமல் பாதுகாக்கிறது.

ஆகையால் ஸிபாகா ஃப்ளோரைடுக்கு நன்றி. என் முப்பத்திரண்டு பற்களும் பளிச்சிடும் வெண்மையுடன் வாழ்நாள் முழுவதும் உறுதியாக இருக்கும். சாக்லேட் எல்லாம் இருந்தும் கூட.

பற்களுக்கு பலம். என்றென்றும் தரும்.




ULKA-13196 TAM

Registered as Newspaper in Srilanka





